# சிவனருட் கோலங்கள்”

புலவர். அர. ஆத்திஅடியான், எம்.ஏ.,பி.லிட்,எம்.ஃபில்,
உதவியாளர்
அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும்
பண்பாட்டுக் கல்லூரி
பழனி - 624 602
அண்ணா மாவட்டம் - தமிழ்நாடு

கிடைக்குமிடம்
சேகர் பதிப்பகம்
63, சவுண்டம்மன் கோயில் லைன்,
வடக்கு தேவாங்கர்தெரு, பழனி.
624 601

1 9 9 5

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | — | 'SIVANARUT KOLANGAL' |
| Author | — | Pulavar R. ATHIYADIAN, M.A., B.Litt. M.Phil Assistant Arulmigu Palaniandavar College of Arts & Culture, PALANI - 624 602. |
| Publisher | — | Sekar Pathippakam, 63, Soundamman Kovil Lane, North Devangar Street, PALANI - 624 601. |
| Language | — | TAMIL |
| Edition | — | First |
| Date of Publication | — | July 1995 |
| Copy Right | — | Author |
| Number of Pages | — | 102 |
| Number of Copies | — | 1000 |
| Prize | — | Rs. 25/- |
| Printer | — | The Mullai Achagam, Vadipatty - 624 218 |
| Paperused | — | Sesoy Paper |

"This book is Published with the Financial Assistance of THIRUMALAI THIRUPATHI DEVASTHANAMS UNDER their Scheme aid to Publish Religious Books".

# பொருளடக்கம்

டாக்டர் பெ. சுப்பிரமணியன், அருள்மிகு பழனியாண்டவர்
தேர்வுநிலை விரிவுரையாளர், கலை-பண்பாட்டுக் கல்லூரி,
தமிழ்த்துறை-உயர் ஆய்வுமையம், பழனி-624 602.

# அணிந்துரை

புலவர் திரு. அர. ஆத்தி அடியான் அவர்கள் அருள்மிகு பழனியாண்டவர் கலை - பண்பாட்டுக் கல்லூரி, தமிழ்த்துறை உயர் ஆய்வு மையத்தில் பகுதிநேர மாணவராகத் தமிழ் எம்ஃபில் பயின்றார். எனது மேற்பார்வையின்கீழ் ஆய்வு மேற்கொண்டார். சமய பக்தி இலக்கியங்களில் மிகுதியான ஈடுபாடு கொண்டவர். சைவசித்தாந்தத்தை விருப்பப்பாடமாகக் கொண்டு பயின்றவர். இவர் எழுதிய "சிவனருட் கோலங்கள்" எனும் இந்நூல் சிவபெருமானின் உருவத் திருமேனிச் சிறப்பினையும், அருள் பாலிக்கும் திறத்தினையும் சமய, தத்துவப் பின்னணியுடன் எடுத்துரைக்கிறது.

சிவபெருமானின் ஒவ்வொரு எழில்கோலத்திற்கும், பொருத்தமான விளக்கத்தை பாடல் சான்றுகள் கொண்டு எடுத்-துக்காட்டி விளக்கியிருப்பது இவரது சமயப் புலமையைக் காட்டு கிறது. மேலும் சைவபக்தி இலக்கியங்களில் தலையாவதுமான தேவாரம், திருவாசகம் போன்ற நூல்களிலிருந்தும், சங்க இலக் கியங்கள் முதலிய பல நூல்களிலிருந்து மேற்கோள்காட்டி விளக்கியிருப்பது இவரது ஆழ்ந்த புலமையைக் காட்டுகிறது.

சிவபெருமானின் எழிற்கோலத்தை விளக்கும்போது படி மவியலோடு (ICONOGRAPHY) பின்னிப்பிணைந்துள்ள தத்து வக் கருத்துக்களை இவர் புலப்படுத்தியிருப்பது மிகவும் பாராட் டிற்குரியதாகும். உருவ வழிபாட்டில் சிறப்பினையும், நுட்பத் தினையும் இவர் நூலின் நெடுகிலும் கூறிச்செல்கிறார். "தியானத்திற்கு உருவம் மிகவும் இன்றியமையாதது. உருவம் இல்லாத பொருளை உயிர்கள் மனத்தால் நினைக்கவும் இய- லாது. ஆதலின் அவ்வுயிர் தன்னை நினைத்தும், வாழ்த்தியும், வணங்கியும், உய்வு பெற வேண்டும் என்னும் பெருங்கருணை யால் இறைவன் பலவகைத் திருமேனிகளைக் கொள்ளுகிறான், எனவே இறைவனுக்கு உருவத்திருமேனி இன்றியமையாததா- கிறது" என உருவ வழிபாட்டின் முக்கியத்துவத்தை நூலின்

தொடக்கத்தில் ஆசிரியர் விளக்கியுள்ள திறம் படித்து இன்புறத் தக்கதாகும்.

சிவபெருமானின் இருபத்தைந்து எழில்கோலங்களை காஞ்சிப்புராணம் வழிநின்று இனிய, எளிய நடையில் இந்நூலில் பக்திச்சுவையுடன் ஆசிரியர் கூறியுள்ளார். இந்நூல் பக்தர் களுக்கு மிகவும் பயனபடும். இதுபோல் பல நூல்களை, இந் நூலாசிரியர் வெளியிட என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

டாக்டர் பெ. சுப்பிரமணியன்

# நன்றியுரை

"அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன்"

என்பது திருவருட்பயன் எனும் ஞான நூலின் கருத்துப்படி இறைவன் உருவம் உடையான் என்பதோடு அமையாது மூவகைத் திருமேனியை உடையான் என்பதாம். உயிர்கள் பொருட்டு இறைவன் உருவத்திருமேனி கொண்டு அருள்பாலிக்கும் தகைமையை (நடத்த நிலையை) காஞ்சிப்புராணம் எனும் நூல் இருபத்தைந்து வடிவங்களாக பகுத்துக்காட்டுகிறது அத்திருமேனிகளின் அமைப்பும், வடிவழகும், எடுத்துக் காட்டப்பட்ட நிலையும், போற்றுவதற்குரியதாக அமைந்துள்ளது. இதனை இங்கு விரித்துரைத்தும், தேவாரம், திருவாசகம் போன்ற சைவ பக்தி இலக்கியங்களிலிருந்து தக்க சான்றுகள் காட்டியும், படிப்போர்க்கு எளிமையாக இலக்கிய நயமுடன் இந்நூலை தொகுத்தளித்துள்ளேன்.

இந்நூல் வெளிவர நிதியுதவியருளிச் செய்த திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாக அலுவலர்களுக்கும், பதிப்புத் துறை அலுவலர்களுக்கும் எனது நன்றியறிதலை உரித்தாக்குகின்றேன். நூல் வெளிவர எனக்கு முழு ஒத்துழைப்பு நல்கி ஆர்வம் ஊட்டிய அருள்மிகு பழனியாண்டவர் கலை பண்பாட்டுக் கல்லூரி முதல்வர் திரு. எஸ். செயபாலன், எம்.காம்.,எம்ஃபில் அவர்களுக்கு எனது இனிய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனக்கு முழு ஆதரவு நல்கி அவ்வப்போது இந்நூலின் பொருட்டு தக்க அறிவுரை பகன்ற எனது ஆசான் டாக்டர் பி. சுப்பிரமணியன், எம்.ஏ ,பி எச் டி அவர்களுக்கும் எனது நன்றியறிதலை உரித்தாக்குகிறேன். மேலும் எனக்கு உதவி நல்கி ஒத்துழைப்பு அளித்த எனது இனிய நண்பர்கள் திரு கே.சங்கரன் சிறப்புநிலை தட்டச்சர், திரு. டி. அய்யாக்கண்ணு தட்டச்சர், திரு வி. பெருமாள், பதிவறை எழுத்தர் ஆகியோர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இந்நூலை நன்முறையில் அச்சிட்டு வழங்கிய தி முல்லை அச்சகத்தார்க்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நாள் : -7-95
இடம் : பழனி

அ. ஆத்தியடியான்

# சிவனருட் கோலங்கள்

இறைவனுக்கு உருவம் உண்டு என்பாரும் உருவம் இல்லை என்பாரும் இவ்வுலகில் உள்ளனர். இறைவனுக்கு உருவம் இல்லை என்று கூறுவது அவனது 'சொரூப நிலை'யை நோக்கி-யேயாகும். அவனுக்குப் பலவகையான உருவங்கள் உண்டு என நூல்களில் கூறப்பட்டுள்ளவை அவனது தடத்த நிலை நோக்கியேயாகும்.

'ஒருநாமம் ஓருருவம்
ஒன்றுமிலார்க் காயிரம்
திரு நாமம் பாடி நாம்
தெள்ளேணம் கொட்டாமோ'[1]

என்ற மணிவாசகப் பெருமானின் திருவாக்கில் முற்பாதி 'சொரூப நிலையையும், பிற்பாதி தடத்த நிலையையும் குறிப்பால் உணர்த்-துவதை உணரலாம். தடத்த நிலையில் இறைவன் வேண்டிய வடிவத்தை வேண்டியவாறு கொள்வான். இங்ஙனம் கொள்வது அவனது அருட் சத்தியாலேயே என்பது அறியத்தக்கதாகும்.

'நாயகன் எல்லா ஞானத்
தொழில்முதல் நண்ணலாலே
சாயுமோ மாயை யன்று
காண்பது சக்தி தன்னில்'[2]

எனும் பாடல் வலியுறுத்தும். சக்தி என்பது இறைவனது திருவருள் என்பது அறியத்தக்கதாகும். ஆகவே இறைவனது திருமேனியும் அவற்றில் அமைந்த படைக்கலங்களும், ஆடை அணிகலன் முதலியனவும் அவன் [illegible] ஆகும். அவற்றைக் கொண்டு ஆற்றுகின்ற செயல்களும் இறை- அருளால் அன்றி வேறில்லை.

---

1. திருவாசகம் - திருத் தெள்ளேணம் - 1
2. சிவஞானசித்தியார் 1.41.

இறைவன் உலகத்தை செயற்படுத்துங்கால் உருவத்தை உடையவனாகவே நின்று செயல்படுத்துகிறான் உருவமில்லாத உயிர் உடலை இயங்கச் செயற்படுத்துவது போல, உலகிற்கு உயிராய் நிற்கும் இறைவன் உருவம் இன்றியே அதனைச் செயற்படுத்தகூடுமாயினும் உலகத்தில் செயற்பாடு உயிர்க்குப் பயன்படுதற்பொருட்டே உருவம் உடையவன் ஆகின்றான் இதனை

> உருவருள் குணங்களோடும்
> உணர்வருள் உருவில் தோன்றும்
> கருமமும் அருள்' அரன்றன்
> கரசுர ணாதி சாங்கம்
> தரும் அருள் ; உபாங்க மெல்லாந்
> தான் அருள்; தனக்கொன்றின்றி
> ஆக்கினன் அசிந்தனன்றே[3]

என்பது அருணந்தியின் வாக்கு. இத்திருப்பாடலில் இறைவன் உருவம் கொள்ளுதல் தன்பொருட்டன்றி உயிர்கள் பொருட்டே-யாகும் என்பது கண்டுமகிழ்தற்குரியதாம்.

தியானத்திற்கு உருவம் மிகவும்இன்றியமையாதது.உருவம் இல்லாத பொருளை உயிர்கள் மனத்தால் நினைக்கவும்இயலாது. ஆதலின் அவ்வுயிர் தன்னை நினைத்தும், வாழ்த்தியும் வணங்-கியும் உய்வுபெறவேண்டும் என்னும் பெருங்கருணையால் இறைவன் பலவகைத் திருமேனிகளைக் கொள்ளுகிறான். எனவே இறைவனுக்கு உருவத்திருமேனி இன்றியமையாத-தாகிறது.

இறைவனது திருமேனிகளை மூன்றுவகையாக பிரித்துப் பேசுகின்றது சைவசித்தாந்தம். அவை, அருவம், உருவம், அருவுருவம் என்பனவாகும். இதில் அருவம் என்பது காட்சியால் அறியப்படாது கருதல் அளவையால் அறியப்படுவதாகும். எ.டு: ஆகாய முதலியன உருவம் என்பது காட்சியால் அறியப்படுவது எ-டு: நிலம். நீர் முதலியவை. அருவுருவம் என்பது ஒருகால்

---

3. *சிவஞான சித்தியார்* - 1.47

காட்சியால் அறியப்படும் மற்றொருகால் காட்சியால் அறியப்படாமலும் இருப்பது எ-டு: 'தீ' முதலியன. இதனை அப்பர் பெருமான்

'ஒருருவே மூவுருவம் ஆனநாளோ' 4 எனக் குறிப்பிடுவார், இறைவன் அருவநிலையில் சிவம், சக்தி, நாதம், விந்து எனவும் உருவநிலையில் மகேசன், ருத்திரன், திருமால், அயன் எனவும் அருவுருவநிலையில் சதாசிவம் எனவும் வழங்கப்பெறுகின்றான். இவை ஒன்பதும் நவந்தருபேதம் என்று வழங்கப்பெறும். ஒருவனாகிய இறைவனே உலகத்தை செயல்படுத்தவேண்டி நவந்தருபேதங்களாய் நிற்பன் என்பது தெளிவு.

இறைவன் தன்பொருட்டு யாதொரு வடிவத்தையும் வேண்டாதவன்; ஆருயிர்களின் பயன் கருதியே இந்த மூவகை வடிவங்களை மேற்கொள்கிறான். இறைவன் உலகை நோக்காது தந்நிலையில் நிற்கும்பொழுது 'சிவன்' என்று வழங்கப்பெறுகிறான். இதுவே சொரூப நிலை எனப்படும் உண்மைநிலை. இந்நிலையில் இறைவன் பரமசிவன், சொரூப சிவன், சுத்தசிவன் என்றெல்லாம் பேசப்பெறுகிறான். இந்நிலையில் அவனது சக்தி பராசக்தி எனப் பெயர் பெறுகிறது இந்நிலையில் இறைவனுக்கு யாதொரு வடிவமும் இல்லை இதுவே அருவநிலை எனப்படும்.

இறைவனது மேலான பராசக்தி உலகத்தை நோக்கும்போது "ஆதிசக்தி என்ற பெயர் பெறுகிறது. இவ்வாதி சக்தி பராசக்தியில் ஆயிரத்தில் ஒருகூறு என்று கூறுதல் சித்தாந்த மரபாகும். ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என மூன்றாகப்பிரியும். இச்சை என்பது விருப்பம். இது உயிர்களுக்கு நலம் செய்ய வேண்டும் என விரும்பும் கருணையாகும். ஞானம் - அறிவு இது விரும்பியவாறே நலம் செய்வதற்கு ஆவன அறிவதாகும். கிரியை-செயல் இவை அறிந்தவாறே செய்வதாகும்.

இச்சக்திகளே படைத்தல் சக்தி, காத்தல் சக்தி, அழித்தல் சக்தி முதலாக எண்ணிறந்த சக்திகளாக விரிந்து நின்று தொழிற்படும். இவ்வாறு எண்ணிறந்த சக்திகளாக சொல்லப்பெறினும் அவற்றுள்

பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியா சக்தி என்னும் ஐந்துமே முதன்மையானவையாகும் இதனையே

> ஒன்றதாய், இச்சா ஞானக்
> கிரியையொன் றொரு மூன்றாகி
> நின்றிடும் சக்தி; இச்சை
> உயிர்க்கருள் நேசமாகும்
> நன்றெலாம் ஞானச் சக்தி;
> யால் நயந்தறிவன் நாதன்:
> அன்றருட் கிரியை தன்னால்
> ஆக்குவன் அகிலமெல்லாம். [5]

எனச்சித்தியார் பேசும்.

இங்ஙனம் மேற்கூறிய சக்திகளைக் கொண்டே இறைவன் தனது தொழில்கள் அனைத்தும் செய்கின்றான். இதனை

> "நங்கையினால் நாம் அனைத்தும்
> செய்தாற் போல் நாடனைத்தும்
> நங்கையினால் செய்தளிக்கும்
> நாயகனும்" [6]

என அழகாகக்கூறுகிறது.

இறைவன் அயனாய் நின்று படைத்தல் தொழிலைச் செய்ய நினையுங்கால் அவனது சக்தி வாணி எனப் பெயர்பெறும்.

இறைவன் அரியாய் நின்று காத்தல் தொழிலைச் செய்ய-நிலையுங்கால் அவனது சக்தி திருமகளாய் நிற்பாள் இறைவன் அரனாய் நின்று அழித்தல் தொழிலைச் செய்ய நினைக்குங்கால் அவனது சக்தி உமையாய் நிற்பாள்.

மறைத்தலை இறைவன் மகேசுவரனாய் நின்று செய்யும்-போது அவனது சக்திமகேசுவரியாய் நிற்பாள். இறைவன்

---

5. சிவஞான சித்தியார் - 1-63

6. திருக்களிற்றுப்படியார் - 78

கொள்ளுகின்ற உருவத்திருமேனிகள் யாவும் இம்மகேசுவர-நிலையின் வேறுபாடுகளே. ஏகபாதர், அர்த்தநாரீஸ்வரர் உமாசகாயர், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடராசர் முதலான மகேசுவர மூர்த்தங்கள் இருபத்தைந்து எனக் கணக்கிடப் பெற்றுள்ளன.

மற்றும் அடியார்க்கு தோன்றியருளிய வடிவங்கள் பல-வாகும் தேவர்கள் பொருட்டும் ஏனைய உலகத்தவர் பொருட்டும் திரிபுரத்தை எரித்தது, சனகாதி முனிவர்களுக்கு தட்சிணா-மூர்த்தியாய் ஞானத்தை அருளியது முதலியனவும் இம்மகேசுவர மூர்த்தத்தால் என்பது அறிந்து தெளிக.

இறைவன் அருளலைச்சதாசிவனாய் நின்று செய்யும்போது அவனது சக்தி மனோன் மணியாய் நிற்பாள். இந்நிலை பொது வாய் நின்று அருவுருவமும் ஆகாமல் அருவுருவத்திருமேனியாய் அமையும். இவ்வடிவமே ஒளிப்பிழம்பாய் நின்ற சிவலிங்கத் திருமேனி எனப்படும்.

மேலும் இறைவனுடைய உருவத்திருமேனிகள்

1) போக வடிவம் 2) யோக வடிவம், 3) வேகவடிவம் என மூவகைப்படும் போகவடிவம்-உலக இன்பத்தை தருதற்பொருட்டு மணக்கோலம் கொள்ளுதல் போன்றவை. யோக வடிவம்-ஞானத்தைதருதற் பொருட்டுக் குருமூர்த்தியாய்எழுந்தருளியிருத்-தல் பேன்றவை. வேக வடிவம் - உயிர்களின் துன்பம் துடைக்க கொள்ளப்படும் போர்க்கோலம் போன்றவையாகும்.

இறைவன் போகவடிவம் கொள்ளாவிடில் உயிர்கட்கு போகம் அமையாது. யோக வடிவம் கொள்ளாவிடில் உயிர்-கட்கு ஞானம் உதியாது. வேக வடிவம் கொள்ளாவிடில் உலகிற்கு வரும் துன்பம் நீங்காது. இறைவன் சனகாதி முனிவாகள் பொருட்டு யோகியாய் இருந்த காலத்தில் உயிர்கட்கு போகம் முதலியவை அமையாதிருத்தலை புராணங்கள் எடுத்தியம்பும்.

இறைவன் திருப்பெருந்துறையில் தம்மை ஆட்கொண்ட அருமையை மணிவாசகப் பெருமான்

'கோகழி யாண்ட குருமணி'[7]

'குருந்தன் கீழ் அன்றிருந்த கொள்கையும்'[8]

என்று பேசுவார்.

இதுகாறும் கூறியவற்றால் இறைவன் உலக உயிர்கள் பொருட்டு உருவத்திருமேனி கொண்டு அருள்பாலிக்கின்றான். என்பது தெள்ளிதின் விளங்கும்.

இறைவனது திருஉருவங்களை காஞ்சிபுராணம் இருபத்தைந்தாக விரித்து உரைக்கின்றது.

அவற்றின் விரிவினை இங்கு காணலாம்:

அவை முறையே 1) சிவலிங்கம் 2) சோமஸ்கந்தர் (அம்மை அப்பன் பிள்ளை) 3) ஏகபாதர் (ஒற்றைத்தாளர்) 4) எச்சேஸ்வரர் (வேள்வி முதல்வன்) 5) இடபாருடர் (ஆனேற்று அண்ணல்) 6) சந்திரசேகர் (பிறைசூடிய பெருமான்) 7) நடராசர் (கூத்தப் பெருமான்) 8) உக்கிரர் (கடுஞ்சினக் கடவுள் 9) அர்த்த நாரீஸ்வரர் (மாதொரு பாதியன்) 10) இலகுளீசர் (சிவகுரு வடிவம்) 11) விஷாபஉறரணர் (நஞ்சுண்டகண்டர்) 12) சலந்தராரி (சலந்தற் செகுத்தேன்) 13) சக்கரதானர் (அரியினுக்கு ஆழி அளித்தோன்) 14) அந்தகாசுரஹரணர் (அந்தகனைச் செற்றோன்) (15) திருபுராந்தகர் (மூவெயில் எரிந்தோன்) 16) கங்காதரர் (கங்கை தங்கு சடையர் 17) ஆபத்சகாயர் (இடர்நீக்தி உதவும் இறைவன்) 18) சோதிலிங்கேஸ்வரர் (அயன், அரி, தொழும் அனற்கடவுள்) 19) மச்ச சம்காரர் (மீன் கண் பறித்த வெய்யோன்) 20) கூர்மசம்காரர் (ஆமையோடணிந்த ஆண்டவன்) 21) வராக சம்காரர் (பன்றிக் கொம்பொன்று அணிந்த பண்ணவன்) 22) நரசிம்மசம்காரர் (ஆளரியை அடர்த்த அம்மான்) 23) கங்காளர் (முதுகெலும்பணிந்த முன்னோன்) 24) கால பைரவர் (படைப்போன் சிரங் கொள்பைரவர்) 25) பிச்சாடனர் (பலிக்கெழு கோலப்பரமன்)

---

7. திருவாசகம் - சிவபுராணம் வரி - 3
8. திருவாசகம் - கீர்த்தித் திரு அகவல் - வரி - 61

## 1. சிவலிங்கம்

சிவலிங்கம் என்பது சிவம் + லிங்கம் - சிவலிங்கம் என வழங்கப்பெறும்.

சிவம் - கடவுள் லிங்கம் - அடையாளம் இது கடவுளைக் காட்டும் குறி அல்லது அடையாளம் என்பது பொருளாகும். லிங்கம் என்பது லி - லயம், ஒடுங்குதல் கம் - போதல் அல்லது தோன்று-தல் எனப்படும். ஆன்மாக்களும், அகில உலகங்கள் அனைத்தும் ஒடுங்குவதற்கும் தோன்றுவதற்கான இடம் என்பது பொருள். இச்சிவலிங்கத்திருமேனியின் அடிப்பாகம் உடுக்குப் போன்ற பீடம் காணப்படும். இதற்கு ஆவுடை என்று பெயர். இதன் மேல் உருண்டு நீண்ட முனையற்ற தண்டொன்று காணப்படும். இதற்கு பாணம் அல்லது லிங்கம் என்று பெயர். இவற்றுடன் ஆவுடையின் மேல் பாகத்தில் ஒரு பக்கமாக கோமுகம் ஒன்று காணப்படும்.

சிவலிங்கம், ஒரு உருவமாக அமைந் திருந்தாலும் அது மற்ற திருமேனிகள் போல் மனித உருவத்தோடு அமையவில்லை. முன்னர் கூறியதுபோல் அருவமாகிய இறைவன் ஏனைய உருவங்களெல்லாம் தோன்றுவதற்கும் இறுதியில் எல்லாம் தன்னுள் ஒடுங்குவதற்குமான ஒரு திருவுருவத்தைக் கொள்ள வேண்டியவனாகிறான். அவ்வாறுஇறைவன் கொண்ட அருவுரு-வத் திருமேனியாகிய சதாசிவமே சிவலிங்கத் திருமேனியாகும்.

பெற்றோர் சாயல் பிள்ளைகளிடம் என்பது போல் பூமி, சூரியன், சந்திரன், முதலிய அண்டங்களும் பிண்டங்களும், முட்டைகளும், காய் கனிகளும், பூக்களின் ஆரம்ப நிலையும், விளக்கின் ஒளிச் சுவாலையும், இவைபோன்ற பிறவும், சிவலிங்க வடிவமாக அமைவதைக் காணலாம்.

அணு உலக ஆராய்ச்சியாளர்கள் அணுவாக விளங்கும் எலக்ட்ரானை சோதனை செய்ததில் பச்சை நிறமான ஒரு வட்டத்தின் நடுவில் செந்நிறம் பொருந்திய சோதி ஒன்று சுடர்விடக் கண்டுள்ளனர். இப்பச்சை வடிவம் ஆவுடையினையும்

சோதிவடிவும் சிவலிங்கத்தினையும் ஒத்துள்ளது என்பதை அறியலாம்.

இறைவன் அருஉருவத் திருமேனி கொண்ட இன்னரே அனைத்தையும் படைத்து, காத்து. அழித்து, மும்மூர்த்திகளா-யினமையால் சிவலிங்கம் திருமூர்த்தி சொரூபமாகின்றது. ஆவுடையில் பிரம்ம, விஷ்ணுக்களும், பாணத்தில் (லிங்கம்) சிவனும் அடக்கம் என்பார்கள். இனி சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபட்ட திறத்தைக் காஞ்சிப்புராணம் காட்டுமாறு காணலாம் "சிவலிங்கத் திருமேனியை பல்வேறு உலகங்களிலும் மனலகளிலும், காடுகளிலும், பெருக்கெடுத்து ஓடும் நதிக் கரைகளிலும் தெள்ளிய கடற்கரைகளிலும் பூவில் வாழ்கின்ற பிரம்மதேவனாலும், மணிவண்ணனாகிய திருமாலாலும், விண்-ணுலகில் வாழ்ந்து வரும் முனிவர்கள் சித்தர்கள், மற்றும் அனைத்துதேவர்களாலும், அமைத்து வழிபடப்பட்ட திருவுருவமே சிவலிங்கமாகும். அவ்வாறின்றி வேறு யாவர் செய்யவல்லவர் கூறுவீர் உணர்வுடைய பெருமையுடையோர்களே!!" என்பது.

"விரைமலரோன் மணிவண்ணன் முகிலூர்
முனிவர் சித்தர் விண்ணோர் யாரும்
வரைகளினும் வனங்களினும் வார்ந்த,நதிப்
புடைகளினும் மணிநீர் வேலைக்
கரைகளினும் எங்கெங்கும் கண்ணுதலோன்
சிவலிங்கப் பதிட்டை யொன்றே
உரைவளங்கச் செய்தமைத்தார் அன்றியே
றெவன் செய்தார் உணர்வான் மிக்கிர்.[9]

எனும் பாடலில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபட்ட சிறப்பினை எடுத்தியம்புகிறது

## 2. சோமாஸ்கந்தர் (அம்மையப்பபிள்ளை)

போர்க்களத்தில் கொதித்து எழுகின்ற சக்கரப் படையை-யுடைய திருமாலும் விண்ணுலகில் வாழும் தேவர்கள் முனிவர்கள் யாவரும் போற்றித் துதித்து வணங்க, பெருமை மிக்க குளிர்ச்சி

9. சிவநெறிச் செய்யுள் திரட்டு, பாடல் எண்: 603, பக். 115

பொருந்திய கங்கையை அணிந்து, அழகிய மணிகள் பொருந்திய பீடத்தின் மேல் சிவபெருமான் வீற்றிருக்கவும், விண்ணவர் பிராட்டியாகிய உமையம்மையும் உடனிருக்க இவர்களுக்கிடையே அழகிய ஒளிபொருந்திய வேலாயுதத்தைத் தாங்கிய காளையாகிய முருகப் பெருமான் அமர்ந்திருக்க பிறவித் துன்பத்திற்கு மருந்தாகி வீற்றிருக்கும் பெருமானின் திருவுருவம் என்றவாறு

இதனைக் காஞ்சிப்புராணம்,

"அடலிற் கொதிக்கும் படையாழி
யண்ணன் முதலோ ரேத்தெடுப்பத்
தடவுச் சீயப் பிடர்த் தலையிற்
கவினு மணிப்பூந் தவிசும்பர்க்
கடவுட் பிராட்டி யுடங்கிருப்பக்
கதிர்வேற் காளை நள்ளிருப்ப
நடலைப் பிறவி மருந்தாகி
வைகுநாதன் திருவுருவம்"[10]

என இறைவன் சோமாஸ்கந்த மூர்த்தியாகி எழுந்தருளி-யிருப்பதை நமக்கு உணர்த்துகிறது

3 ஏகபாதர் (ஒற்றைத்தாளர்)

தன்னை நாடிவந்தவர்க்கு அருளுகின்ற ஒரு திருவடியும், பொற்கமலம் போன்ற கண்கள் மூன்றும், படமெடுத்தாடும் பாம்பணிந்த நான்கு தோளும், திரிசூலப்படையும் எழில் விளங்க, தனது இடது பாகத்தில் திருமாலையும், வலதுபாகத்தில் பிரம்-மனையும், மற்றும் இருபத்து எட்டுக் கோடி உருத்திரர்களையும் நடுவே தோன்றி நிருத்தி நின்றருளும் அருள்வடிவம் கொண்டு அருள்பாலித்திட்டருளும் ஏகபாதர் திருவுருவம்.

மேலும் சொல்லப்பபட்ட இடப்பாற் பகுதியாகிய மூலப் பகுதியாகிய இருபத்து நான்காவது தத்துவமும், புத்தித்-தலத்திற் புத்தியினையும், அகங்காரத்துள் உறுகின்ற தன்-மாத்திரைகள் (மனம், புத்தி; ஆங்காரம், சித்தம்) ஆகிய அவ்வ வற்றை அருளுகின்ற ஊன்றியதிருவடியும், மறைவாகிய தலை-யில் பஞ்ச பூதங்களும் (நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்) அழகிய மூன்று விழிகளில் சூரியன் சந்திரன் ஆகியோரை படைத்து அருள்புரிந்தும்

10. சிவநெறிச் செய்யுள் திரட்டு - பாடல் எண்: 604 - பக் 115

ஊன்றிய திருவடியில் பூமி, பாதாளம் முதலிய கீழ் உலகங்களைத் தோற்றுவித்தும், மேல் உலகங்கள் அனைத்தையும், தன்து சடாமுடியில் அளித்தருளியும், கருணையே வடிவமாகி, தன்னைப் போற்றித் துதித்து வணங்கும் அடியார்களது கொடிய பிறவி நோயை அறவே நீங்கி ஒதுக்கும் ஊர்த்துவ மூர்த்தியின் திருவுருவம்.

''அடுப்பார்க் கருளு மொருதாளும்
அம்பொற் கமல விழி மூன்றும்
படப்பாம் பணிந்த புய நான்குஞ்
சூலப் புடையு மெழில் வயங்க
இடப்பா லரியை வலத்தயனை
யெழுநாற் கோடி யுருத்திரரை
நடுப்பாற் றோற்றி யைந்து
வடிவு முடனா நலம் பிறக்கி'' [11]

''புகன்ற பிடப்பாற் பகுதியினைப்
புந்தித் தலத்திற் புந்தியினை
யகங்காரத்தி னுறு தன்மாத்
திரையிற் பொறியி னவ்வவற்றைத்
தருந்தாள் குய்ய முந்திகளை ந்
தலையிற்பார் நீ ரனல் வளிவான்
பிருஞ்சீர் விழியி னிடத்திரவி
வென் கேழ் மதியைப் படைத்தருளி'' [12]

எனவும்

''அடியினடங்குங் கீழுலக
மனைத்து மடியி னுறத் தோற்றி
முடியினடங்கு மேலுலக
முழுது முடிப்பா லளித்தருளிப்
படியில் கருணைப் பிழம்பாகிப்
பரசுமடியா ரகவிளக்காய்க்
கொடிய மலநோ யரட்டொதுக்குங்
கோலைப் பெருமான் திருவுருவம்'' [13]

11. சிவநெறிச் செய்யுள் திரட்டு - பாடல் எண் 605. பக். 115.
12. ,, ,, ,, 606 - ,, 116
13. ,, ,, ,, 607 - ,, 116

என ஏகபாத மூர்த்தியின் வடிவத்தை வடிவமைத்து காட்டுகிறார் ஆசிரியர்.

மேற் சென்னவாறு இறைவன் பஞ்ச பூத வடிவினனாக விளங்குதலை

அப்பர் பெருமான் தமது திருத்தாண்டகத்தில்

"இருநிலைத் தீயாகி விசும்பு மாகி
இயமான னாய் எரியுங் காற்று மாகி
அரு நிலைய திங்களாய் ஞயிறாகி
ஆகாச மாய் அட்ட மூர்த்தி யாகி" [15]

எனப்பஞ்சபூதவடிவினனாகி இறைவன் விளங்குவதை அழகுற எடுத்துக்காட்டுவர்.

4. எச்சேஸ்வரர் (வேள்வி முதல்வன்)

வேள்வி முதல்வனாகிய பெருமானை காஞ்சிப்புராணம் காட்டுமாறு காண்போம் :

உயிர்களுக்கு இடைவிடாது இன்பத்தினை வாரி-வழங்குகின்ற கருணைத் திறமும் முகங்கள் இரண்டும், செம்மை நிறம் பொருந்திய அழகிய தாமரை மலரினை யொத்த திரு-வடிகள் மூன்றும், கூர்மை பொருந்திய அழகிய கொம்புகள் நான்கும், ஆணவம் முதலாகிய மலங்கள் ஐந்தினையும், ஒடுக்கிக் காத்தருளும் கரங்கள் ஏழும், இடைவிடாது அருளை வழங்கி காத்தருளும் எச்சத்தலைவனாகிய வேள்வி முதல்வனின் திரு-வுருவம் என்பதாம்.

"ஓவா வின்பப் பெருங்கருணை
யொன்றும் வதன மோரிரண்டும்
பூவார் கமலப் பதமூன்றும்
போகுங் கூர்ங்கோ டொரு நான்குங்
காவா யென்பார் மலமைந்து
மறுமா றளிக்குங் கரமேழுந்
தாவா வருளும் படைத்துடைய
வெச்சத் தலைவன் திருவுருவம்" [16]

15. சிவநெறிச் செய்யுட் திரட்டு - பாடல் எண் : 608-பக்.166.

இதனையோ காரைக்கால் அம்மையார் தம் அற்புதத் திருவந்தாதியில் :

"அவனே இருசுடர் தீ ஆகாசம் ஆவான்
அவனே புவிபுனல் காற் றாவான் - அவனே
இயமான னாய் அட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றாலும் வந்து" [15]

பரத சாஸ்திரம் இறைவனது நூற்றிஎட்டு தாண்டவ வகைகளில் இவ்வூர்த்துவ தாண்டவமும் ஒன்றாகக் குறிப்-பிட்டுள்ளது. இது மாலும், அயனும் இசைக் கருவிகளை முழங்க இறைவன் ஒரு தாளால் ஆகாயம் ஊடுறுவவும், மற்றொரு தாளால் அதல பாதாள லோகத்தை ஊடுறுவியும் ஆடும் கூத்து எனக் குறிப்பிடுகிறது.

5. இடபாரூடர் (ஆனேற்றண்ணல்)

நந்தி எம்பெருமான் மீது அமர்ந்து விளங்கும் அண்ணலை பக்தி இலக்கியங்கள் பலபட விதந்து பேசும் இதனை

திருநாவுக்கரசு சுவாமிகள் :

"..........................................

..........................................
போரார்ந்த மால்விடை யொன் றூர்வான் கண்டாய்
புகலூரை அகலாத புனிதன் கண்டாய்" [18]

என ஊழிக்காலத்தில் திருமால் காளையாகி இறைவனைத் தாங்கியதைக் கூறுவார்.

"வெய்யனை விடையூர்தியை வெண்மழுக்
கையனை கடல் நாகைக்கா ரோணனை" எனவும்

15. காலைக்காலம்மையார்,அற்புதத்திருவந்தாதி,பாடல்எண்:21
18. அப்பர் தேவாரம், திருக்கோடிக்கா திருத்தாண்டகம், பாடல் எண் : 5
19. அப்பர் தேவாரம் திருநாகைக்காரோணம் எண் : 5

"ஏறேறி யேழுலகும் உழிதர் வானை
இமையவர்கள் தொழு தேந்த இருக்கின்றானே"[20]

"அடல்விடை யூர்தியாகி அரக்கன்தோள் அடரவூன்றி
கடலிடை நஞ்சமுண்ட கறையணி கண்டனார்" [21]

சுந்தரர்

"ஊர்வதோர் விடை ஒன்றுடையானை" [22]

என்றும்

"வெந்த நீர்மெய் பூசவல் லானை
வேத மால் விடை ஏறவல் லானை"

உடலெங்கும் திருநீற்றினை அணிந்தும், வேதப் பொருளாகிய திருமாலாகிய விடையின் மீதேறி வருகின்ற பெருமானைக் காட்டுவார்.

"கொடிபடு மூரி வெள்ளை
எருதேற்றையும் ஏறக்கொண்டின்"[23]

தூய வெள்ளை நிற விடைமீது இறைவன் ஏறுவதைக் காட்டுவார்

"மருவார் கொன்றை மதுகுடி
மாணிக்கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதொடு"[24]

கொன்றை மலர் மாலையும் இளமதியும் சூடியவராக இறைவன் உமையம்மையோடு மாணிக்கமலைபோல விடைமேல் எழுந்தருளுவதைக் காட்டுவார்.

---

20. அப்பர் தேவாரம் திருவதிகை வீரட்டானம் எண் 2
21 ,, திருப்பருப்பதம் ,, 10
22. சுந்தரர் தேவாரம், திருநீடூர் ,, 1
23. சுந்தரர் தேவாரம், திருப்பழ மண்ணிப்படிக்கரைப்பதிகம், பாடல் எண் : 6.
24. சுந்தரர் தேவாரம், திருக்கடவூர் மயானம், பாடல் எண் : 1

"சுடல் விடையினன் மழுவாளினன்"[25]

எனப் போர்க்களத்தில் இடிபோல் முழக்கமிட்டு வரும் விடையினை உடையவன் என்பார்.

"சிரமென்னும் கலனானைச்
செங்கண்மால் விடையானை"[26]

தாமரை மலர்போல் சிவந்த கண்களையுடைய திருமால் விடையாகத் தாங்கியதைக் காட்டுவார்.

**திருஞானசம்பந்தப் பெருமான் :**

"உம்பருள் ளார் தொழு தேத்த நின்ற
பெற்றமரும் பெருமானை" [27]

விடையின்மேல் எழுந்தருளியிருக்கும் பெருமானை விண்ணில் வாழும் தேவர்கள் யாவரும் தொழுது, போற்றி வணங்கும் திறம் காட்டுவார்.

**மணிவாசகப் பெருமான் :**

"கடகரியும் பரிமாவும் தேரும் உகந் தேறாதே
இடபம் உகந்தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்கள் அவை மூன்றும் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால் காண் சாழலோ" [28]

யானையும், குதிரையும், தேரும், விரும்பி அமர்ந்து வலம்வராமல் காளையை விரும்பி அமர்ந்துவரும் திறம் எனக்கு அறியுமாறு கூறுவாய்.

திரிபுரம் எரித்த அந்நாளில் திருமால் விடையாகி இறைவனைத் தாங்கி போருக்கு எழுந்தான்காண் எனக் காட்டுவார்.

---

25 சுந்தரர் தேவாரம், திருமறைக்காடு பாடல் எண். 6

26. சுந்தரர் தேவாரம், திருவன்பார்த்தான் பணங்காட்டூர் பாடல் எண் : 5

27. ஞானசம்பந்தர் தேவாரம் திருவன்பார்த்தான் பணங்காட்டூர் பாடல் எண் 5

28. திருவாசகம் - திருச்சாழல் பாடல் எண் 15

"திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளி" [29]

வலிமை வாய்ந்த போர் செய்யவல்ல நந்தியின் மீதேறிவருவான் என்பார் மற்றும் மதுரை மாநகரில் பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்ட பெருமான் எனப்பாடுவார்.

"சிவபுரம், பாடித் திருச் சடைமேல்
வாகை மாமதிப் பிள்ளைபாடி
மால் விடை பாடி" [30]

திருமால் விடையாகத் தாங்கி எழுந்தருருவான் இறைவன் என்-பதைக் காட்டுவார்.

பட்டினத்தார் :

"................. இருகோட் டொருதிமிற்
பால் நிறச் செங்கண் மால் விடைப் பாக" [31]

எனவும்

"திருவிடைமருத பொருவிடைப் பாக
மங்கை பங்க கங்கை நாயக" [32]

போர்க்களத்தில் பொருது வெல்லவல்ல விடையை உடையவன் இறைவன் என்பார்.

காரைக்காலம்மையார் :

"நடக்கிற் படிநடுங்கும் நோக்கின் திசைவேகம்
இடிக்கின் உலகனைத்தும் எங்கும் அடுக்கற்
பொருமேறோ ஆனேறோ பொன்னொப்பாய் நின்னே
றுமேறோ ஒன்றா உரை" [33]

---

29. திருவாசகம் திருப்பூவல்லி பாடல் எண் : 16
30. திருவாசகம், திருப் பொற் சுண்ணம், பாடல் எண் : 17.
31. பட்டினத்தார் பாடல், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.
32. பட்டினத்தார் பாடல், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
33. காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி பாடல் எண் : 100

நடந்தால் கால்பட்ட இடம் நடுநடுக்கும், நோக்கும் பொழுதில் எட்டுத்திக்கும் செல்லுகின்ற திசை வேகமாகும், நந்தியில் போர்க்கெழும் இடிபோன்ற ஒலியானது கேட்பில் உலகங்கள் அனைத்தும் என்ன விளைவு ஏற்படப் போகின்றதோவென்று ஏக்கமுறும், இவ்விடைபோர் செய்யவல்லதோ? ஆண்மையுடையதோ? பொன்னினை யொத்த இறைவா இது நீ ஏறிவரும் விடைதானா? அல்லது மேற்காட்டிய வகைமையுடைய ஒன்றா? எனக்குக் கூறுவாய் என்கிறார் அம்மையார் சுவைபட.

**இதனைக் காஞ்சிப்புராணம் காட்டுமாறு காணலாம்:**

போர்க்களத்தில் எதிர்த்தவரின் குடல் குழம்பவும்,இடியைப் போல் முழக்கமிட்டு, எதிர்த்தும், தொகுதியாகவுள்ள வலிமை மிக்க படைகளை தமது அழகிய அச்சம் தரத்தக்க விழிகளால் ஒளி நோக்கம் செய்தும் கைலாய மலை வரை நடந்தாலனைய போர் செய்ய வல்ல நந்தியெம் பெருமான் மேல்

மலைமகளுடன் உடன் அமர்ந்து காட்சி தரும் தேவதேவனான சிவபெருமானின் திருவுருவம்.

இதனை :

''இகலி யெதிர்தோர் குடர் குழம்ப
விடியின் முழுங்கி யேற்றெதிர்ந்து
தொகுவெம் படைகண முழுதுழக்குந்
தோலா மதுகைச் சூர்த்தவிழி
புகரில் காட்சி வெள்ளிவரை
நடந்தாலனைய போர் விடைமேற்
றிகழ மலைமாதுடனுறையுந்
தேவ தேவன் திருவுருவம்.[34]

### 6. சந்திரசேகரர் (பிறை சூடும் பெருமான்)

பிறைசூடிய பெருமானை, அப்பர் பெருமான் தம் தேவாரப் பதிகங்களில்

---

34. சிவநெறிச் செய்யுட் திரட்டு - பாடல் எண் 609. பக். 116.

''செங்கடைக் கற்றை முற்றத் திளநிலா எறிக்குஞ்
சென்னி''[35] எனவும்

''சாட எடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை''[36]

என்பதால் தக்கன் வேள்வியில், இறைவனுக்கு அவிர்பாகம் கொடுக்காமல் யாகத்தை நடத்தினான், அதனால் சினங்கொண்ட பெருமான் அகோர வீரபத்திர மூர்த்தியைத் தோற்றுவித்து, தக்கன் வேள்வியை அழித்ததோடல்லாமல், அந்த யாகத்தில் கலந்து கொண்ட தேவர்களுக்கு தண்டனையும் வழங்கினார். அதில் சந்திரனை காலால் தேய்த்தருளினார், வீரபத்திரர். என்றும் இறைவன் அச்சந்திரனுக்கு அடைக்கலமளிக்கும் பொருட்டு, அச்சந்திரனின் ஒரு கலையாகிய பிறையினை தம் சடாமுடியில் ஏற்று, வளர்தலும், தேய்தலுமாகிய வரத்தினை அளித்தருளினார் இறைவன் என்பது பண்டைய புராண வரலாறாகும். இதனையே சாட எடுத்தது தக்கன் தன் வேள்வியிற் சந்திரனை எனக்குறிப்பிடுகிறார்.

''முற்றாத பால் மதியம் சூடினானை'' எனவும்
''தசரதன் தன் மகன் அசைவு தவிர்த்தான் கண்பாய்
இளம்பிறையும் முதிர் சடைமேல் வைத்தான் கண்பாய்''[37]
எனவும்

''குளிர்புனல் வளைந்த திங்கள் சூடினார்''[38]

முற்றாத என்பதால் முழுமை பெறாத பிறைநிலா என்றார். மற்றும் வளைந்த திங்கள் என்பதால் வளர்ந்துவரும் மூன்றாம் பிறையைச் சூடினார் என்பதாம்.

''தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞகன் எம்மிறை'' எனவும்[39]
''நீறுபூசிய நிமிர்சடை மேற்பிறை
''ஆறுசூடும் அடிகள் உறைபதி''[40] எனவும்

---

35. அப்பர் தேவாரம், கோயில் பதிகம், பாடல் எண் : 1
36. அப்பர் தேவாரம், கோயில் பதிகம், பாடல் எண் : 10
37. அப்பர் தேவாரம், திருஇன்னம்பர் பதிகம், பாடல் எண் : 9
38. அப்பர் தேவாரம், திருப்பழனம் ,, பாடல் எண் : 1
39. அப்பர் தேவாரம், திருவாவடுதுறைப் பதிகம் பாடல் எண் : 2
40. ,, ,, திருவாஞ்சியம் ,, ,, 4

"சந்திரனும் தண்புனலுஞ் சந்தித் தான் காண்" [41]
எனவும்

"பின்னுசடைமேற் பிறை சூடினாய் காண்," [42]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் ;

"மல்கிய செஞ்சடைமேல் மதியும்" [43] *

எனவும்
"மருவார் கொன்றை மதிசூடி" [44] எனவும்
"முளைவளரிள மதி உடையவன்" எனவும்
"ஏடுவான் இளந்திங்கள் சூடினை" [45]
எனவும்

பெருகிய செஞ்சடைமேல் பிறைநிலவைச் சூடினார் என்றும், கொன்றை மலர் சூடிய சடாமுடியின் ஒருபுறம் பிறைநிலவைச் சூடினான் எனவும், வளர்கின்ற இளமைவாய்ந்த பிறை நிலவைத்தாங்கியவன் எனவும், அழகுறக் காட்டுவார்,

மணிவாசகப் பெருமான் :

"துண்டப்பிறையான் மறையான் பெருந்துறையான்" [46]
முழுநிலவில் ஒரு துண்டாகிய பிறைநிலவைச் சூடிய மறையாளன் இறைவன், பெருந்துறை எனும் தலத்தில் வாழ்பவன் என்பார்.
"சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள் நெரித்திட்டெச்சன்தலையரிந்து" [47]

என்பதால் தக்கன் வேள்வியில் பங்கேற்ற சந்திரனைக்காலால் தேய்த்தருளிய வீரபத்திரரின் செயலை இறைவன் செயலாகவே காட்டுவார் மணிவாசகப் பெருமான்.

---

41. அப்பர் தேவாரம் திருக்கோகர்ணம் பதிகம்-பாடல் எண் : 1
42. ,, கடவூர் மயானம் ,, ,, 1
43. திரு நனிப்பள்ளி ,, ,, 5
44. சுந்தரர் தேவாரம் திருப்பாண்டிக் கொடுமுடி ,, 6
45. ,, ,, ,, ,, 5
46. திருவாசகம்—திருவம்மானை—— ............ ,, 9
47. ,, — ,, ,, ,, 15

காரைக்காலம்மையார்

''பெருகொளிய செஞ்சடைமேற் பின்னைப் பிறையின்
ஒருகதிரே போந்தொழுகிற்றொக்கும்''[48]

எனவும்

''கலங்கு புனற்கங்கை யூடால லாலும்
இலங்கு மதி இயங்கலாலும் .........''[49]

கங்கையின் பிரவாகம் இங்குமங்கும் அலைமோதி கலக்கவும், சடாமுடியில் ஒளிவிடுகின்ற பிறைச்சந்திரனும் இயக்கிப்பிரகாசிக்கவும் என்பர்

பட்டினத்தார் ;

''தோற்றம் பிறிதில் தோற்றாச் சுடர்முளை
விரிசடை மீமிசை வெண்மதி கிடப்பினும்''[50]

முளைவிடுகின்ற பிறைச்சந்திரனை தனது விரிந்த சடாமுடியில் தாங்கியவர் இறைவன் என்பார்.

காரைக்காலம்மையார் :

''ஈன்டொலிசேர் வானத் தெழுமதியை வானரவம்
தீண்டச் சிறுகியதே போலாதே''[51]

என்பதால் பாம்பு தீண்டியதால் (விழுங்கியதால்) முழுமதியானது குறுகி பிறைநிலா ஆனதோ ? என வினாத் தொடுப்பார்.

திருஞானசம்பந்தப் பெருமான்

''தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்
மதிசூடி'' [52]

என்றும்

---

48. அற்புதத் திருவந்தாதி, (காரைக்காலம்மையார்) பாடல் எண். 32
49. ,, ,, ,, ,, 75
50. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை ,, எண். வரி 16-17
51. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
52. திருஞானசம்பந்தர் தேவாரம், திருப்பிரம்புரப்பதிகம் பாடல் எண். 1

"...............................

காளியன்றகளி யின்னுரி போர்த்துழல் கள்வன் கடை தன்
மேல் வானியன்ற பிறை வைத்த எம் ஆதி"[53]

உமையம்மையை ஒருபாகம் கொண்டதால் இடப்பக்க

செவியில் தோடும்,தூய வெண்ணிறமான பிறைநிலவும் அணிந்து, விடையேறிவருவர் இறைவன் என்பார்.

மற்றும் யானையின் தோலுரித்துப் போர்த்துக் கொள்ளும் கள்வன், வானத்தில் திரிகின்ற பிறைச்சந்திரனைச் சடையில் சூடியவர் என்றும் போற்றுவார்.

இனிக்காஞ்சிப்புராணம் காட்டும் சந்திரசேகரர் (பிறை சூடும் பெருமான்) மூர்த்தியைக்காண்போம் :

சிவபெருமானோடு, பராசக்தி ஒருபால் அழகுற அமர்ந்-திருக்கும் சிறப்பினை நோக்கி திரளாக தொழ வந்துள்ள பெருந்-தேவர்களின் திருக்கூட்டத்தை, தமது கைப்பிரம்பினால் ஒவ்-வொரு வகைப்பட்ட தேவசாதியினரை முறையாக, அணிவகுத்து நிற்குமாறு ஒழுங்குபடுத்தும் அழகிய திருநந்தி தேவர்க்கு இறைவன் பலவிதமான வரங்கள் கொடுத்து, தேவகணங்கள் 'அரகர மகாதேவ' எனப் போற்றித் துதிபாட வீற்றிருந்தருளும் பழமைவாய்ந்த இறைவனின் திருவுருவம்.

உடையா ளொருபால் வீற்றிருக்குஞ்
 செவ்வி நோக்கி யுள்புக்கு
மிடையா நின்ற பெருந்தேவர்
 விலகப் புடைக்கும் வேத்திரத்தின்
படையார் குடங்கைத் திருநந்தி
 பகவன் றனக்கு வரமுதவிப்
புடையார் கணங்கள் போற்றிசைப்ப
 வைகும் புராணன் திருவுருவம்".

என, சந்திரசேகரமூர்த்தியின் எழிற் காட்சியினை அழகுறக் காட்டுகிறார்.

---

53. திருஞானசம்பந்தர் தேவரம்—திருவலிதயாப்பதிகம் பாடல் எண்: 6

54. சிவ நெறிச் செய்யுட்டிரட்டு-பாடல் எண்: 610 பக் 117

## 7. நடராசர் (கூத்தப் பெருமான்)

"அணுக்களெல்லாம் ஏகதாளத்தில் ஆடிக் கொண்டிருக்கின்றன" என்பதை விஞ்ஞானம் கண்டுள்ளது.

அணுக்கள் இயங்க அண்டங்கள் இயங்குகின்றன. அண்டங்கள் இயங்க இறைவனும் நடனமிடும் கோலத்தை நமக்குக் காட்டி உயிர்களுக்கு அருள்பாலிக்கின்றான் என்பர். இது ஆனந்தக் கூத்து என்பதால் உயிர்வர்க்கங்களும் இன்பம் அடைகின்றன என்பது சான்றோர் வாக்கு.

இவ்விறைவன் அருட்திரு உருவத்தில், வலது பாதத்தை முயலகன் மீது ஊன்றியும், இடது பாதத்தை சற்று மேலே உயர்த்தியும், இடதுகையால் தூக்கிய குஞ்சித பாதத்தைக் காட்டியும் மற்றொரு இடது கையால் அக்கினியை தாங்கியும் ஒரு வலக்கையால் அபயமுத்திரை காட்டி அருளியும், மற்றொரு வலக்கையில் உடுக்கை ஏந்தியும் அமைந்திருக்கும் திருக்கோலம்

ஊன்றிய திருவடி திரோபவம், என்னும் மறைத்தலையும் அதாவது ஒடுக்கத்தையும், குறிப்பனவாகும்என்பதை இராமலிங்க சுவாமிகள்,

"மாற்பதம் சென்றபின் இந்திரர் நான்முகர்
வாமனர் மால் மற்று ள்ளோர்
ஆற்பதம் கொண்ட பல்லா யிரங்
கோடி அண்டங்களையும் தம்
காற்பதம் ஒன்றில் ஒடுக்கி
நிற்பா ரெம் கடவுளரே"[55]

எனும் திருப்பாடலில் இறைவன் தனது ஊன்றிய திருவடியில் இந்திரர், நான்முகர், மால் மற்றுமுள்ள பலகோடி தேவர்கள் அண்டங்கள் ஆகிய அனைத்தையும் ஒடுக்கி, மறைத்தலான தொழிலைச் செய்கிறார் என்பதை அழகுற காட்டியருளுகிறார்,

தூக்கிய திருவடி அருளல்' என்னும் தொழிலையும், உடுக்கை ஆக்கல் தொழிலையும், எரியகல் அழித்தல் தொழிலையும், அபயகரம் இறைவன் உயிர்களுக்கு எல்லா நலன்களும் வழங்கும்

---

55. திருவருட்பா-இராமலிங்க சுவாமிகள் பாடல்

அளித்தல் தொழிலையும் குறிப்பதாகும். இது ஊன நடனம் எனப்படும். இதனை

> ''தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
> காற்றிலும் அங்கியிலே சங்காரம்-ஊற்றமாய்
> ஊன்று மலர்பதத்தே உற்றதிரோதம் முத்தி
> நான்ற மலர்ப்பதத்தே நாடு'' [56].

பொதுவாக இறைவன் உலகின்மேல் வைத்து படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களையும், உயிரின்மேல் வைத்து மறைத்த அருள் ஆகிய தொழில்களையும் செய்தலைத் தூய ஐந்தொழில் என்பர். இனி இறைவன் உலகை ஒடுக்கியபின் மீண்டும் அதனைத் தோற்றுவித்தற்காக ஐந்தொழில் இயற்று தலையும், உயிர்கள் உறங்கும் நிலையில் இவ்வைந் தொழில் இயற்றுதலையும் சூக்கும ஐந்தொழில் என்பர். இனி அவ்வுயிர் விழிப்பு நிலையில் தத்துவங்களோடு கூடி நின்று உலகியல் இன்பங்களை நுகர்தற்பொருட்டு இயற்றும் ஐந்தொழிலை அதிசூக்கும ஐந்தொழில் என்பர். இம்மூன்றும் உயிர் வினைப் பயனை ஈட்டவும், நுகரவும் காரணமாயிருத்தலின் ஊன நடனம் என்பர். இதனையே மேற்காட்டிய தோற்றம் துடியதனில்... எனும் பாடல் விளக்குகிறது.

### ஞான நடனம்

> ''மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்
> சாய அமுக்கி அருள் தான்எடுத்து-நேயத்தால்
> ஆநந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்
> தான் எந்தை யார் பரதம் தான்''[57]

துடியை முழக்குவதன் மூலம் உயிரிடத்துள்ள மாயையை நீங்கச் செய்தும், நெருப்பேந்திய திருக்கை மூலம் அவ்வுயிரின் வலிய கன்ம மலத்தைச் சுடுவித்தும், முயலகன் மீது ஊன்றிய திருவடியின் மூலம் ஆனவ மலத்தின் வலி கெடும்படி செய்தும் தூக்கிய திருவடியின் மூலம் அருளை வழங்கியும், இவ்வாறு தன் திருக்கருணையினால் உயிரைத் தம் திருவருளோடு இனயவித்தும்

---

56. உண்மைவிளக்கம், பாடல் எண் 35

57 உண்மைவிளக்கம்—பாடல் எண் 36.

பேரின்பப் பெருவாழ்வில் திளைக்கச் செய்வதே எமது தந்தையாராகிய கூத்தர் பெருமானின் திருக்கூத்தின் உண்மையாகும்.

மேற்கூறிய ஊன நடனத்தால் உயிர், இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்றுப் பக்குவமுற்ற நிலையில் அதனைப் பேரின்பப் பெருவாழ்வில் தலைப்படுதற்காகச் செய்யும் ஐந்தொழிலையே இப்பாடல் கூறுகின்றது. இதுவே ஞான நடனம் என்பர். வரதம் எனப்பாடங்கொண்டுதன் அமைந்த திருக்கரத்தின் மூலம் அவ்வுயிர்க்களைப் பேரின்பப் பெருவாழ்வில் ஆழ்த்தித் திளைக்கச் செய்வன் எனப் பொருள் காண்டல் தக்கது என்பது திருத்தகுமை. ஆதீனத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதியானம் அவர்களின் திருவுளப்பாங்காகும்.*[58]

## ஆனந்த நடனம்

"மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தான் அந்த மானிடத்தே தங்கியிடும்-ஆனந்தம்
மொண்டருந்த நின்றாடல் காணும் அருள் மூர்த்தியாக்
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து"*[59]

எனும்பாடலில், நரையையும், உணர்வையும் அற்று நிற்கும் ஞானியர்தம் மும்மலங்களின் வாசனையை முழுமையாக நீக்கி ஆணவம் முழுதும் அற்ற நிலையில் கிடைக்கின்ற பேரின்பத்தைத் துய்த்து இன்புறுதற் பொருட்டு உமையம்மையே தம் ஆடலைக் கண்டு வழிபடுமாறு செய்தருளும் கூத்தப் பெருமானின் திருக்கூத்தாகும் இது.

மேற்கூறிய ஞான நடனத்தின் பயனாக உயிரை இறைவன் தன்னையே கண்டு இன்புறுமாறு அவ்வுயிரின் அறிவு, இச்சை, செயல்களைத் தன் வழிப்படுத்தச் செய்வதே இந்நடனம் ஆகும், இதனை ஆனந்த நடனம் என்பர்.

அப்பர்பெருமான் :

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்தசடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும்

---

58 * உண்மைவிளக்கம்—பாடல் எண். 37.

59. * இக்குறிப்பு, உண்மைவிளக்கம், திருப்பனந்தாள் ஆதீன வெளியீடு 1979ல் காணப்படுகிறது.

இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே''[60]

என்பதால், நடராசப் பெருமானின் வடிவழகை அழகுறக் காட்டுகிறார். வளைந்த அழகிய புருவமும், கோவைப்பழம் போன்ற சிவந்த நிறமுடைய வாயில் அழகிய முறுவலும், அசைந்தாடுகின்ற சடாமுடியும், செவ்விய பவளம் போன்ற மேனியில் திரிபுண்டரமாகப் பூசப் பெற்ற பால் போன்ற திருநீறும், உயிர்களுக்கு அருளுகின்ற தூக்கிய திருவடியாகிய குஞ்சித பாதமும் காணப்பெறுபவர்களுக்கு, இப்புவியில் மனிதப் பிறவியும் வேண்டுவது வேறு என்ன? திருவடி காணப்பெறுவதற்கே மனிதப்பிறவி என்பதாம்.

''அரியானை அந்தணர் தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள் தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே'' [61]

இப்பாடலில், புலியூரனாகிய தில்லைப் பொன்னம்பலவன்

நினைத்தற்கு அரியவன், அந்தணர் தன்னை வழிபடுவதால் அவர்களது சிந்தையில் நிறைபவன், மறைகளின் உட்பொருளாய் விளங்கிநிற்பவன், அணுவிற்கும், அணுவாக எவரும் கண்டு கொள்ள இயலாத தத்துவன், தேன்போன்றவன், பால் போன்றவன், ஒளி போன்றவன், தேவர்களுக்கு அரசன், திருமான், பிரமன், நெருப்பு, காற்று, கடல், மலை ஆகியவற்றில் கலந்து நின்று விளங்கும் பெரியோன். அவனைப் போற்றி வழிபடாத நாட்களெல்லாம் பிறவாத நாளாகும் என்பார்.

60. அப்பர் தேவாரம், கோயில், திருவிருத்தம், பாடல் எண் : 4
61. அப்பர் தேவாரம், கோயில், பெரிய திருத்தாண்டகம், பாடல் எண் : 1

சுந்தரமூர்த்தி சுவாமிகள்

''மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே
    மனனேநீ வாழும் நாளும்
தடுத்ததாட்டித் தருமனார் தமர் செக்கில்
    இடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்தில் தமருகமும்
    எரி அகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர் சிற்றம்பலத்தெம்
    பெருமானைப் பெற்றா மன்றே'' [62]

இயமனுடைய காவலர் செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான், சிற்றம்பலத்து நடமிடும் பெருமான் தனக்கு அடிமையாக இருக்கும் தன்மையில் நம்மைத் திருப்பி ஆட்கொள்ளுவான் என்கிறார்.

உண்மை விளக்கம்

''ஆம்படி கேள் நல் லம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வா முடியப் பார்''[63]

திருவடி — 'ந' கரம்
(திருவயிறு) உதரம் — 'ம' கரம்
தோள் — 'சி' கரம்
முகம் — 'வா' காரம்
திருமுடி — 'ய' கரம் என்பதால் 'நம சிவாய'

எனும் பஞ்சாட்சம் தோன்றுவதைக் காணலாம். இதனை மற்றும்

''சேர்க்குந் துடி சிகரஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் ய கரம் அபயகரம் — பார்க்கிலிறைக்
கங்கி ந கரம் அடிக்கீழ் முயலகனார்
தக்கும் ம கரமது தான். [64]

---

62. சுந்தரமூர்த்திசுவாமிகள், தேவாரம், கோயில் திருப்பதிகம், பாடல் 1

63. உண்மை விளக்கம் பாடல் எண் 32

64. ,, ,, ,, 33

என்பதால் 'சிவாயநம' பஞ்சாட்சரத் தோற்றத்தைக் காட்டுவார். இவ்விருவகையான திருவைந்தெழுத்துக்களும் கூத்தர் பெருமானின் திருமேனியாக விளங்குவதன் கருத்து, அப்பெருமான் உயிர்களுக்கு இம்மைக்கும், மறுமைக்கும் வருத்தம் வந்து அடையாதவாறு காத்தருளும் குறிப்பு என்பதாம்.

> ஓங்காரமேநல் திருவாசி உற்றதனின்
> நீங்கா எழுத்தே நிறைசுடராம் — ஆங்காரம்
> அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது
> பெற்றார் பிறப்பற்றார் பின்''[65]

நடராசப் பெருமானைச் சுற்றியிருக்கும் திருவாசியே ஓங்காரமாகும் மேற்சொன்ன பாடலில் காட்டியவாறு பஞ்சாட்சரம் இறைவனது உருப்புகளில் சுடர் எழுத்துக்களாகப் பிரகாசிக்கும் பஞ்சாட்சரம் திருவைந்தெழுத்தே சிவபரம் — பொருளாகும். இவ்வாடலை அறிந்து வழிபடுவோர்க்கு பிறப்பில்லை என்பார். காஞ்சிப்புராணத்தில் கூத்தர் பெருமானின் வடிவழகை,

> ''சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு
> மறைக்கோவுந் தழல்கால் சூலம்
> ஆங்கேந்து மம்மானுந் தத்தமது
> தொழிற்றலைநின் றாற்றச் செய்தோர்
> பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
> விருமுனிவர் பணிந்து போற்றக்
> கொங்கேந்து மனிமன்றுட் குனித்தருளும்
> பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்'' [66]

இப்பாடலில், சங்கினை கையில் ஏந்திய திருமாலும், பிரம்மதேவனும், சூலம் ஏந்திய ருத்திரமூர்த்தியும் முறையே காத்தல், படைத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை செய்துவரப் பணித்தவரும், தனது ஒருபாகத்தில் பங்கேற்கும் சிவகாமியம்மை இறைவனின் திருத்தாண்டவத்தைக் கண்கள் களிப்புற வியந்து நோக்கியும், வியாக்கிரபாத முனிவரும், பதஞ்சலிமுனிவரும் இறைவன் திருநடங்கண்டு பணிந்து போற்றி வழிபடவும் மணி

65. உண்மை விளக்கம், பாடல் எண் 34.
66. சிவநெறி செய்யுட்றிரட்டு, பக்கம்—12, பாடல் எண் 54

மன்றமாகிய தில்லைப் பொதுவில் அருட்கூத்து நிகழ்த்தும். ஆனந்த நடராசப் பெருமானை தொழுது வாழ்வதே உயிர்களுக்கு பெருமைமிக்க சிறந்த வாழ்வாம் என்பதாம்.

**திருநாவுக்கரசுவாமிகள்**

"அரங்கிடை நூலறிவாளர்
அறியப்படாததொன் கூத்து" [67] என நூலறி-

வாளர்களால் அறியப்படாததும் குருவின் உபதேசம் பெற்றவர் களால் மட்டுமே அறியப்படுகின்ற கூத்து என்று கூத்தர் பெருமானின் திருக்கூத்தைப்பாடுகின்றார்.

கூத்தப் பெருமானுடைய திருவடிகள் அசையின் பாதாள உலகம் அசையும், திருமுடி அசையின் வான்முகடு அசையும், கைகள் அசையின் எட்டுத்திக்குகளும் அசையும், ஆற்றாத அந்நிலைமைகளை அறிந்தனவாகி அப்பெருமான் பொன்னம்பலத்தில் அருட்கூத்தினை அடங்கிய வடிவத்துடன் நிகழ்த்துகிறான் என்பதை காரைக்காலம்மையார் தம் அற்புதத்திருவந்தாதியில்.

"அடிபேரிற் பாதாளம் பேரும் அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும் — கடகம்
மறிந்தாடு கைபேரின் வான்திசைகள் பேரும்
அறிந்தாடும் ஆற்றா தரங்கு" [68]

என விளக்குவார்.

இதனைக் காஞ்சிபுராணம் :-

செவ்விய கால்களையுடைய அன்னப்பறவையின் பெண் அன்னமானது சிலம்பின் ஒலிகேட்டு அஞ்சி அருகணையும் படியான மணிப்பூண் முலையையுடைய அம்மையாகியசிவகாமி, இறைவனது திருக்கூத்தினை வியந்து கண்டு அருகில் நிற்கவும், நான்மறைகளும் அஞ்சி ஓலமிடவும், பெருக்கெடுத்தோடிவரும் கங்கையைக் கண்டு வானவர் அஞ்சி வருத்தமுற, அதனைத் தம் சடாமுடியில் தாங்கி அடக்கிய கங்கைப் பிரவாகம் அலம்பவும், அழகிய பெருந்திருக்கூத்தாடும் பெருமானின் திருவுருவம் என கூத்தர் பெருமானின் திருக்கூத்தை காஞ்சிப் புராணம் காட்டும்.

---

67. அப்பர் தேவாரம்
68. காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி பாடல் எண்:77

''சிலம்பி னொலிகேட் டருகணையுஞ்
செங்கா லன்னப் பெடைமானப்
புலம்பு மணிப்பூண் முலையுடையாள்
மகிழ்ந்து நோக்கிப் புடைநிற்ப
உலம்பி மறைக ளோலமிட
உம்பர் பழிச்ச முடிக்கங்கை
யலம்ப வழகார் பெருந்திருக்கூத்
தாடும் பெருமான் றிருவுரும்.''[69]

8. உக்கிரர் (கடுஞ்சினக் கடவுள்)

மலைபோல் பருத்துயர்ந்த நான்கு தோளும், கோபக்கனல் வீசும் கண்கள் மூன்றும், வளைந்து படமெடுத்தாடும் பாம்புகளே அறை நாணாகிய முப்புரிநூலாகவும், பிரம்ம கபாலம் ஏந்திய அழகிய திருக்கைகளும், அக்கினித்தழல் போல் சிவந்த பட்டுச் சீலையால் வளைத்து சுற்றப்பட்ட அழகிய திருமுடியும், திருநீற்றணிதலால் உடல் முழுதும் வெண்ணீறுக்கோலம் கொண்டு விளக்கும் பெருமான் திருவுருவம்.

மதயானையைப் பற்றி அடக்கி அதன் தோலைப் போர்வையாக சூடிக்கொண்ட கோலப் பொழிவும், புகைபோன்ற வெண்ணிற வடிவமுங்கொண்டு நரசிம்மத் திருமேனியராய் தோன்றிய திருமாலின் செருக்கடக்கி' அச்சிங்கத்தின் தோலை போர்வை, யாக போர்த்தியருளுகின்ற சிறப்புமிக்க அழகும், தேனூறும், சிவந்த செந்தாமரை மலரினை யொத்த அழகியகண்கள் மூன்றும், நிலைமாறுகின்ற உலகில் உள்ளோர் துதித்து வணங்கத்தக்க பிரம்மனின் ஐந்து தலைகளில் ஒன்னறக் கிள்ளி எடுத்த அழகிய திருக்கரமும், கூர்மைமிக்கதும் அச்சம்தரத்தக்கதான வளைந்த பற்களும், பிரம்மதேவன் தனது படைப்பாற்றலால் வகுக்கப்பட்ட அண்டங்கள் அனைத்தினையும் தனது வலிமையால் பொரிபோல் கொறித்து, கொறித்து, உழுகின்ற கொக்கு வகையினைச் சார்ந்த அசுரனைப் போர் செய்து கொன்று மறித்துச் சூடிய வெள்ளிய இறகானது, சந்திரனின் ஒளிக்காற்றை தழைத்து உருப்பெற்று எழுந்தது போன்று ஒளி மிக்க பிரகாசிக்கின்ற திருமுடியில் சூடிய அழகும்.

---

69. சிவநெறிச் செய்யுட்டிரட்டு — பாடல் எண் ; 611—பக்—117

திருமால் தனது அழகுமிக்க தோள்களில் வரிசையாகச் சேர்த்துக் கட்டிய முத்துமாலை சிதறும்படியாகவும்,கடல் போன்ற அகன்ற வாயில் சங்கினை வைத்து ஒலிப்பதால் ஏற்படும் ஓங்காரப் பேரொலி எழுப்பியும், பகைவர் அஞ்சும்படியாக வீரம் மிக்க புன்னகையும், பூதகணங்கள் போன்றித் துதிபாடவும் அருளானந்த தாண்டவம் புரியும் உலக நாயகனான உக்கிர-மூர்த்தியின் திருவுருவத் தோற்றம் என்பதாம்.

இதனைக் கீழ்வரும் காஞ்சிப்புராணப்பாடல்களால் அறியலாம்.

''வடாது மலையிற் சுய நான்கு
மலர்க்கண் மூன்று முருத்திருமுந்
தடாய படப்பாப் பரை நாலுங்
கபாலக் கரமுந் தயுலன்றிக்
கடாது சிவந்த சுரிபங்கி
கவின்றமுடியும் வெண்ணிறமுங்
கெடாத வனப்பிற் பெருங்கோலங்
கெழிஇய பெருமான் றிருவுருவம்''[70]

''புரசைக் களிறட் டுரிபோர்த்த
கோலப் பொலிவும் புகைவடிவும்
அரசச் சீய வுரிகொண்ட
வுத்தரீயத் தனியழகும்
பிரசக்கமல மெனச் சிவந்த
விழிகள் மூன்றும் பிறங்குலகம்
பரசத் தகு வெண்டலை தண்டம்
பரித்த கரமுங் கூரெயிறும்''[71]

''மருவிற் பொலிந்த மலர்க் கிழவன்
வகுத்த வண்ட மனைத் தினையும்
பொரியிற் கொறித்துக் கொறித்துமிழும்
பூட்கைக் குரண்டப் பெயரானைச்
செருவிற் படுத்த வெள்ளிறகு
திங்கட் குழவிக் கதிர்கிளைத்திட்
டுருவுற் றெழுந்தா லெனமாடே
யொளிரச் செருகுந் திருமுடியும்.[72]

---

70. சிவநெறிச் செய்யுட்டிரட்டு- பாடல் எண்: 612 பக்—117
71. ,, ,, 613 பக்—118
72. ,, ,, 614 பக்.—118

''திருவரல் பணிலக் கோவை நிரை
 வயங்கும் புயமுந் தெரித்தருளிப்
பெருநீ ரளக்கர் வாய் மடுத்தும்
 உங்காரப் பேரொலி விளைத்தும்
வெருவா வீரம் படநகைத்தும்
 பூதகணங்கள் மிடைந்தேத்த
அருளானந்த நடங்குயிற்றும்
 அண்டர் பெருமான் திருவுருவம்'' [78]

9. அர்த்த நாரீஸ்வரர் (மாதொரு பாகன்)

பிருங்கிமுனிவர் இறைவன் ஒருவனையே வழிபட்டு போற்றிவணங்கும் தகைமையுடையவர். ஒரு சமயம் கைலாய மலையில் சிவபெருமானை வழிபட பிருங்கிமுனிவர் வருகையில் அவர் தன்னையும் வழிபடவேண்டும் என எண்ணிய இறைவி, இறைவனோடு இரண்டறக் கலந்து ஒருருவாய் நின்றனள் இதனைத் தம் ஞானத் திருட்டியால் அறிந்த முனிவர், வண்டு. ருவங்கொண்டு இருவருக்கிடையே, குடைந்து சென்று இறைவனை மட்டுமே வழிபட்டார். இச் செயலால் கோப மடைந்த அம்மை,இறைவனிடம் எப்போதும்பிரியாதிருக்கும் வரம்வேண்ட, இறைவனும் அவ்வாறே அருளிச் செய்து, தமது இடபாகத்தை அம்மைக்கு அளித்து அம்மையப்பராகத் திருக்கோலங்கொண்டு உயிர்களுக்கு அருள்பாளிக்கிறார். என்பது புராண வரலாறாகும். இத்திருக் கோலத்தாலேயே உயிர்களுக்கு போகம் விளைகிறது என்பது சைவசமய மரபாகும்.

இத்திருக் கோலத்தை பக்தி இலக்கியங்களும், சங்க இலக்கியங்களும் எழிலுற எடுத்து இயம்புகிறது. அதனை இனிக்காண்போம்.

இத்திருக்கோலத்தை பட்டினத்தார்

''இளையவன் ணத்து நினைவருங் காட்சி
இருவயின் உருவும் ஒருவயிற் றாகி
வலப்பால் நாட்டம் இடப்பால் நோக்க
வாணுதல் பாகம் நாணுதல் செய்ய
வலப்பால் திருக்கரம் இடப்பால் வனமுலை

78. சிவநெறிச் செய்யுந்திரட்டு—பாடல் எண். 615 — பக் — 118

> தைவந்து வருட மெய்மயிர் பொடித்தாங்கு
> உலகம் ஏழும் பன்முறை ஈன்ற
> மருதிடம் கொண்ட ஒரு தனிக் கடவுள்'' [74]

அம்மை, அப்பரது இருவேறுபட்ட உருவங்கள் ஒன்றாகி விளங்கி, வலதுபாகத்து இறைவனது பார்வை, இடப்பாகம் கொண்ட அம்மையை நோக்க, அதனால் அழகிய நெற்றியினைக் கொண்ட பாகம் நாணமடையவும், இறைவனது வலப்பாகத்துத் திருக்கரம், இறைவியின் அழகிய முலையினை வருடவும், அதனால் மெய்மயிர் சிலிர்ப்ப உலகம் ஏழினையும் பலமுறை தோற்றுவித்து தனியொரு கடவுளாக, தமக்கு ஈடில்லாமல் விளங்கி அருள்பவராகிய மருதீசர் என இருவேறுபட்ட அம்மையப்பரது கோலத்தை அழகுறக் காட்டுவார்.

இவ்வம்மையப்பர் திருக்காட்சியை அகநானூறு,

''சேர்ந்தோள் உமையே'' என இடப்பாகத்தில் உமையை ஏற்றதைக் காட்டுவார்.

ஐங்குறுநூறு

> ''நீலமேனி வாலிழை பாகத்
> தொருவ னிருதாள் நிழற்கீழ்
> மூவகையுலகம் முகிழ்த்தன முறையே'' [75]

உமையம்மையை தனது ஒரு பாகங்கொண்டு விளங்கும் பெருமானது திருவடியின் கீழ் மூன்று உலகங்களும் தோன்றியதைக் கூறுவார்.

பதிற்றுப்பத்து

> ''இரண்டுருவாய் ஈரணிபெற்ற எழிற்றகையன்'' [76]

அம்மை, அப்பன், என இருவேறு தன்மையுடையோனாகித் தோன்றும் எழில் உடையான் எனப் பேசும்.

---

74. திருவிடைமருதூர் மும்மணிக் கோவை—பாடல் வரி 63-70.
75. ஐங்குறுநூறு.
76. பதிற்றுப்பத்து

**சிலப்பதிகாரம்**

**''கண்ணுதல் பாகம் ஆளுடையாள்'' [77]**

நெற்றிக்கண்ணினைவுடைய இறைவனது ஒரு பாகத்தை ஆளு-பவள் இறைவி என்பார்.

**''கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து**
**மங்கை உருவாய் மறையேத்தவே நிற்பாய்[78]**

கங்கையைச் சூடியவரும், நெற்றிக் கண்ணினையுடையவரும், ஒரு பாகத்தில் மங்கையாகிய உமையம்மையை கொண்டவரும், மறைகள் போற்றி வணங்கிட நின்றருளுபவராகிய பெருமான் என்பதாம்.

**திருவாசகம்:**

**''தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்**
பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ[79]

என்பதால்

புலித்தோலாடை—இறைவனுக்குரியதாம்
துகிலாடை, குழை, சுருள்தோடு ஆகியன இறைவிக்குரியதாம்,பால்போன்ற வெள்ளை நிறமுடையதிருநீறு இறைவனுக்குரித்தானவை என்றும் அழகிய பசுமை வாய்ந்த
சாந்தும்,கிளியும் அம்மைக்குரியதாம் சூலம்—இறைவர்க்-கும் இறைவிக்கும் பொதுவானதாகவும் இடக்கையில் வளையணிந்த
காட்சி இறைவிக்குரியதாக, அம்மையப்பரது தொண்மைத்திருக் கோலத்தை
மணிவாசகப் பெருமான் அழகுறக் காட்டுவார்.

---

77-78, சிலப்பதிகாரம் — பாடல் வரி 63-70.
79. திருவாசகம்—திருக்கோத்தும்பி—பாடல் எண்! 18

புறநானூறும் :

"பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்"[80]

எனக் கூறுகின்றன.
சுந்தரமூர்த்தி சுவாமிகள்திருநெல்வாயில்அரத்துறைப் பதிகத்தில்,

"வண்டார்குழ லாள் மங்கை பங்கினனே"

என்றும்

இவ்வாறு இறைவனது மாதொருபாதியன் திருவுருவத்தை இலங்கியங்கள் எடுத்துக்காட்டுகிறது.

"மங்கையொர் கூறமர்ந்தீர்
மறைநான்கும் விரித்துகந்தீர்"[81]

என இங்கு,மங்கையாகிய உமையை தம் ஒருபாகத்தே கொண்டு ———————— நான்குமறைகளையும் ஆல நிலற் — கீழ் அமர்ந்து, சின்முத்திரையால் விரித்துக் கூறியதைப்பாடுவார்.

மற்றும்

"மையார் தடங்கண் மடந்தை பங்கா
கங்கார் மதியஞ்சடைவைத்த ஐயா"[82]

உமையம்மையும் தானும் உருவத்தால் வேறு அல்ல ஒருவரே என்பதை, உமையம்மையை தனது ஒரு பாகத்தில் கொண்டு விளங்கும், மாதொருபாகன் திருவுருவத்தை பக்தி இலக்கியங்கள் பாங்குற எடுத்துக் காட்டுவதைக் காணலாம்.

அப்பர்பெருமான் :-

"மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம்பலவன்————'[83]

---

80. புறநானூறு—
81. சுந்தரர் தேவாரம்—திருமுதுகுன்றப் பதிகம் — பாடல்—4
82. ,, ,,
83. அப்பர் தேவாரம், கோயில் திருப்பதிகம், பாடல் என்:11

உமையம்மையை, தேன்போல் இனிய வாய்மொழி பேசும் தனது ஒரு பாகத்தில் ஏற்றவன். என்றும்

"நினைமின்கள் நித்தலும் நேரிழையாளாய
ஒளிவண்டார் கருங்குழலி உமையாள் தன்னை
ஒருபாகத் தமர்ந்து அடியாருள்"———"[84]

என்றும்

"தேனை யார் குழலாளையொர் பாகமா
ஆனை யீருரியார் அன்னியூரரே"[85]

என்றும்

"பால் வணனைத் தீவணனைப் பகலானானை
வார்பொதியும் முலையாளோர் கூறன் தன்னை"[86]

பால்போல் வெண்ணிறத் திருநீறு அணிந்தவன், தீயினைப்போல் செந்நிறமானவன், உச்சிப் பகற்பொழுது போன்றவன், அழகிய கச்சணிந்த மார்பகத்தையுடைய உமையம்மையைதனது ஒருபாகத்தில் ஏற்றவன் தன்னை எனப்பாடுவார்

திருநாவுக்கரசர், பகலானானை என்பதைக் காரைக்காலம்மையார் "கடும்பகலின் வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு" என வெண்ணீற்றிற்கு பகற்பொழுதை உவமையாகக் காட்டுவார்.

"மாவடு வகிர்கொள் கண்ணாள்
மலைமகள் பாகத் தானே"[87]

அம்மையின் கண்கள், மாவடு வகிர்ந்தாலொத்த அழகிய கண்ணினையுடையவளாகிய மலைமகளைத் தன்பாகம் ஏற்ற பெருமான் என்பார். மேலும்

"பாலாரும் மொழிமடவாள் பாகன் கண்டாய்
பசுவேறிப் பலிதிரியும் பண்பன் கண்டாய்" [88]

என்றும்

---

84. அப்பர் தேவாரம் திருக்கழிப்பாலை — பாடல் எண் : 3
85. ,, திருஅன்னியூர் — ,, 7
86. ,, திருக்கஞ்சனூர் — ,, 7
87. அப்பர் தேவாரம், திருக்கோடிகா பதிகம் பாடல் எண் : 8
88. ,, திருமழபாடிப் ,, 9

"பெருந்தாழ் சடைமுடி மேற் பிறை சூடிக்
கருந்தாழ் குழலியும் தாமும் கலந்து [89]

திருப்புகலூர்த் தேவியின் பெயர் கருந்தார் குழலியும் தாமும் (அக்கினீசுவரர், கோணப்பிரான் என்பது இறைவனது திருநாமங்கள்) கலந்து விளங்குபவர் இறைவன் என்பார்.

"வடிவுடை வாள் நெடுங் கண்ணுமை பாகமெயோர்
பால் மகிழ்ந்து வெடிகொள் அரவொடு வேங்கை அதள்
கொண்டு" [90]

என்பதால், அம்மை அழகிய வடிவமுடையவள், வாள்போன்ற நீண்டகண் கொண்ட உமையாளை தனது பாக-மேற்றவர் பெருமான்.

மணிவாசகப் பெருமான் :

"பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன் [91]

"மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன் சடையிற் பாயுமது என்னேடீ" [92]

என மலைமகளை ஒருபாகம் ஏற்றதைக் காட்டுவார்.

"தென்பா லுகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர் காண் சாழலோ" [93]

என்பதால் இறைவன் பெண்ணாகிய உமையம்மைபால் உகந்து அவளை தம் ஒருபாகத்தில் ஏற்றுக் கொண்டு மாதொரு பாகனாக விளங்குகிறான். அவ்வாறு அவன் தனபால் உமையம்மையைச் சேர்க்காவிடில் உயிர்களுக்கு போகம விளையாது, விண்ணுளோர், மண்ணுளோர் யாவரும் போகம் செய்து விடுபேற்றை அடை

89. அப்பர் தேவாரம் திருப்புகலூர் பதிகம் பாடல் எண் : 3
90. ,,
91. திருவாசகம் — திரு அம்மானை ,, 8
92. ,, திருச்சாழல் ,, 7
93. திருவாசகம், திருச்சாழல், பாடல் எண் ; 9

வார்கள். சிவபெருமான் அம்மையோடு கலந்து நிற்பதால்தான் உயிர்களுக்கு போகம் உண்டாகிறது என்பதை இப்பாடலில் அழகுறக் காட்டுவார் அடிகள்.

காரைக்காலம்மையார்:-

''ஒருபால் உலகளந்த மாலவனாம் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால் — இருபாலும்
நின்னுருவம் ஆக நிறந்தெரிய மாட்டேமால்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து'' [94]

இறைவனது திருமேனியில், ஒருபாகம் திருமாலும், மற்றொரு பாகம் உமையம்மையும் கொண்டு விளங்குவதால், உனது உருவம் எந்த நிறமென்று தெரியாது மயங்குகிறோம். நின் உருவம்யாதோ? என வினாத் தொடுக்கின்றார் அம்மையார். திருமாலையும் தனது ஒரு பாகத்தில் கொண்டு சங்கர நாராயணராக விளங்குதலை இப்பாடலில் அழகுறக் காட்டுவார்.

''விருப்பினால் நீபிரிய கில்லாயோ வேறா
இருப்பிடமற் றில்லையோ என்னோ — பொருப்பன்மகள்
மஞ்சுபோல் மால்விடையாய் நிற்பிரிந்து வேறிருக்க
அஞ்சுமோ சொல்லாய் அவள்'' [95]

உனது விருப்பத்தினால் நீ உமையைப் பிரியமாட்டாய், உனக்கு வேறு இருப்பிடம் ஒன்று இல்லையோ? அவ்வாறு நீ உமையம்மையைப் பிரிந்திருந்தால் அவள் மிகவும் அஞ்சுவாலோ சொல்லுவீர், எனக்கு. வெள்ளை நிற விடையேறிவரும் பெருமானே என்பதால் இறைவியை ஒருபோதும் பிரியாது தன் ஒருபாகத்தில் எப்போதும் ஏற்றுவிளங்குகிறான் இறைவன் என்பதாம்.

பட்டினத்தார் :

''சடைமேல் ஒருத்தி சமைந்திருப்ப மேனிப்
புடைமேல் ஒருத்தி பொலிய'' [96]

---

94. காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி, பாடல் எண்41
95. காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி, பாடல் எண்94
96. பட்டினத்தார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை வெண்பா

சடைமேல் கங்கையாகிய மங்கை விளங்கவும், தம் திருமேனியில் உமையம்மை ஒருபாகங்கொண்டு விளங்குகின்ற திருக்கோலத்தையுடையவர் என்பார்.

இனிக் காஞ்சிபுராணம் காட்டும் அர்த்த நாரீஸ்வர் திருக்கோலத்தைக் காண்போம்.

உமையம்மையும், தானும் உருவத்தால் வேறுஅல்ல ஒருவரே என்பதை உணர்த்துவதுபோல் பர்வதராசகுமாரியாய் இமய மலையில் வளர்ந்த அழகிய மயில்போன்ற சாயலையுடைய மலை மகளை தனது ஒருபாகத்தில் சேர்த்து விளங்கும் வடிவுடையவனாகி விளங்கி நான்கு கரத்திலும் முறையே, தாமரை, திரிசூலம், அபயவரதம் தாங்கி உலகவர்கள் பிறவித்தளையினின்றும் விடுபட்டு முக்திநிலையடைய அருள்பாலிக்கும் மாதிருக்கும் பாதியன் திருவுருவம்.

"உமையுந் தானும் வேறன்மை
யுருவி னிடத்துந் தெளிப்பான்போல்
இமய மயிலை யொருபாதி
வடிவி னிருவி நாற்கரத்தும்
அமைய வசைந் திரிசூலம்
அபயவரத மிவை தாங்கி
நமையு முய்யக் கொணடருளும்
நாரிபாகன் திருஉருவம்" [97]

## 10. இலகுளீசர் (சிவகுரு வடிவம்)

உலகிற்காணப்படும், ஆன்மவர்க்கத்தினருள் ஆணவ மலம் உடையவர்களை விஞ்ஞானாகலர் என்றும். ஆணவம், கன்மம், ஆகிய இருமலம் உடையவர்களை பிரளயாகலர் என்றும், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலத்தவரை சகலர் என்றும் சைவசித்தாந்திகள் கூறுவர்.

விஞ்ஞான கலருக்கு இறைவன் உள்நின்று அருள் செய்வான். பிரளயாகலருக்கு, மான், மழுவேந்திய நான்கு கரங்களோடு காட்சியருளுவான். சகலருக்கு இறைவன் குருவாய் எழுந்தருளி ஆட்கொண்டருள் புரிவான் என்பது சாத்திரம்.

97. சிவநெறிச் செய்யுட்திரட்டு, பாடல் எண் ; 616- பக். 118.

சைவ சமயத்தினர் தங்கட்கு உபதேசம் அருளுகின்ற குரு-வைச் சிவமாகவே கருதி வழிபடவேண்டும். 'குருவே சிவமெனக் கூறினன் நந்தி' என்பது திருமந்திரம். 'குரு' என்ற சொல்லுக்கு அஞ்ஞானத்தைப் போக்குபவர் என்பது பொருளாகும்.

சைவசமய முத்திற வழிபாடுகளில் குருவழிபாடும் ஒன்றா-கும். நாயன்மார்களில் குருவழிபாட்டால் அருள் பெற்றோர் பதினொருவராவார்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருமூலர், நெடுமாறர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் யாழ்ப்பாணர், குறும்பர், கணநாதர், அப்பூதியார், சோமாசிமாற[illegible] இவர்கள் பதினொருவர் குருவருளால் உயர் முத்தி அடைந்த[illegible]கள் என்பது சேக்கிழார் புராணம்.

மானைக்காட்டி மானைப் பிடிப்ப[illegible]தப் போலவும், மீனைக்-காட்டி மீனைப்பிடிப்பது போலவும், [illegible]றைவன், கண்ணுதலும், கறை கண்டமும், மறைத்தருளி வந்து ஆன்மாக்களை ஆட்கொள்-வார் என்பது சைவ சமய முடிபாகும்.

சிவபிரான், நம்மைப்போலவே [illegible]னுடவடிவில் வரவில்லை யானால் ஒருவருக்கும் சிவஞானம் உ[illegible]டாக மாட்டாது என்ப-தனை, குருஞான சம்பந்தர் தமது சி[illegible]போக சாரப்பாடலில்,

> ''ஆரறிவார் நீதிவழி ஆரறிவா[illegible] சித்திமுத்தி
> ஆரறிவார் நற்றவங்கள் அ[illegible]னைத்தும்-பாரெவர்க்கும்
> கந்தன் கமலையில் வாழ் ஞா[illegible]பிரகாசன் எனும்
> அத்தன் என்போல் வந்திலா[illegible]னால்'' [97]

என்று உள்ளத்திற் குள்ளிருந்து உயர்த்தினால் இம்மக்கள் உண்மை ஞானம் இன்னதென்று உ[illegible]ரார் ஆகலின், மானிட-வடிவுதாங்கி நம்மை ஆண்டருளவந்து[illegible]ளான் என்று கூறுகிறார்.

திருமூலரும் குருதரிசனப்பயனை பின்வரும் பாடலால் தெளிவாக்குகிறார்.

97. சைவ இலக்கியக் கோவை, [illegible]போக சாரம், பாடல் எண் : 3, பக் — 142.

"தெளிவு குருவின் திருமேனிகாண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவுந்சிந்தித்தல் தானே" [98]

அப்பர் பெருமான்:

"ஆலின்கீ முறங்களெல்லா மன்றவர்க் கருளிச் செய்து
நூலின்கீ ழவர்கட் கெல்லா நுண்பொரு ளாகிநின்று
காலின்கீழ்க் காலன் றன்னைக் கடுகத்தான் பாய்ந்து
பின்னும்
பாலின்கீழ் நெய்யுமானார் பழனத்தெம் பரமனாரே" [99]

ஆலின் கீழ் அமர்ந்து அறங்கள் எல்லாம் அருளியும், அவ்-வறங்களைக் கூறும் நூலின்கண் ஏற்பட்ட நுண்ணிய பொருளு-மாகிநின்று, காலால் காலனைப் பாய்ந்து மிதித்தும், பாலில் நெய் போலவும் விளங்குவார் திருப்பழனம் என்னும் தலத்தில் எழுந்-தருளியிருக்கும் ஆபத்சகாயேசுவரர் என்னும் பெயர் தாங்கிய பெருமான் எனப்போற்றுவார்.

சேக்கிழார் பெருமான் :

"ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த அங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை" [100]

கல்லாமரத்தின் கீழ், சின்முத்திரைகாட்டி, சனகாதி முனிவர்கள் நால்வர்க்கு வேத — அறமுரைத்த பெருமானைக் காட்டுவார். இங்கு நால்வர் என்பார்கள் 1) சனகர் 2) சனந்தர் 3) சனாதனர் 4) சனத் குமாரர் ஆகியோர்.

திருவிளையாடற்புராணம்.

"கல்லாலின் புடையமர்ந்து நான் மறைவா
றங்கமுதற் கற்ற கேள்வி

98. திருமூலர் திருமந்திரம், பாடல் :
99. அப்பர் தேவாரம், திருப்பழனத் திருப்பதிகம், பாடல் எண் : 5.
100. சிவநெறிச் செய்யுள் திரட்டு, பாடல் எண் : 65, பக்கம்-14.

வல்லார்க ளால் வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம
னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்'',[101]

இறைவன், நான்குறைகள், ஆறு அங்கம், கற்றுத்தேர்ந்த நால்வருக்கும், சின்முத்திரை காட்டி, எல்லாமாய், அல்லது மாய் இருந்ததை இருந்தபடி, தான் அமர்ந்து சொல்லாமல் சொன்ன பெருமானாகிய ஆலமர் செல்வனை நாம் நினைந்து போற்றி, இவ்வுலக இருள்மலத்தொடர்பாகிய பிறப்பினை வெல்வோம் என்பார்.

திருநாகைக் காரோணப்புராணம்:

,'பதிபசு பாச மென்னப் படுமொரு மூன்றுஞ் சுத்தம்
பதிநிலை யொன்றற் கொன்று பயில்வியாப் பியமா
மின்னும்
பதியோடு பசுக் கலக்கும் பணபுமிற்றென்றோர்செங்கைப்
பதிவிர லலவிற் சேர்பிற் பகர்பவர் கடிமை செய்வாம்''[102]

பதிபசு, பாச விளக்கத்தை, தமது சின்முத்திரையால் விளக்கி-யருளிய சிவகுருவை போற்றி அவர்க்கு தொண்டு செய்வோம் என விளக்கம் தருகிறது இப்பாடல்.

இதனைத் திருவானைக்காப்புராணம் :

''மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயி
ரம்மலர்த் தானிழ லடங்கு முன்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தி யாதரோ'' [103]

101. சிறநெறிச் செய்யுட்திரட்டு பக்கம்—15, பாடல் என்,66
102. ,, ,, 15, ,, 68
103. சிவநெறிச் செய்யுள் திரட்டு, பாடல் என்: 67 பக்கம் -15

ஆணவம், கன்மம், மாயை எனும் மூன்று மலங்களும் தமது சின் முத்திரையால் வேறுபட்டு ஒழிந்துபட காட்சி நல்கிடும் இறைவனைக் காட்டினார்.

மணிவாசகப் பெருமான் :

> "அருந்தவருக் காலின்கீழ் அறமுதலாம் நான் கனையும்
> இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடி
> அருந்தவருக் கறமுதல் நான் கன்றருளிச் செய்திலனேல்
> திருந்தவருக்குலகியற்கை தெரியா காண் சாழலோ"[104]அ

அன்று ஆலின்கீழ் இறைவன் அமர்ந்து நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களாகவும் சனகாதிமுனிவர் நால்வருக்கும் தனதுசின்முத்திரையால்அறிவித்திருக்காவிடில்இவ்வுலகில்வாழும் உலகத்தவர்களுக்கு இயற்கையறிவு தெரியாமல் போயிருக்கும் என உணர்த்துவார். இறைவன், உயிர்களுக்கு நல்லறிவு கிடைக்கப் பெற்று, நெறி முறைகளுடன் வாழ்ந்து, உய்வுபெற வேண்டும் என்ற நோக்கத்துடனே, சனகாதி முனிவர்கள் மூலம் அறிவுறுத்தினார் என்பதாம்.

நக்கீரதேவ நாயனார் ;

> "நான்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன் றால் நிழற்கீழ்
> வான்மாலை ஆகும் வகையருளி" தோள்மாலை
> விட்டிலங்கத் தக்கிணமே நோக்கி வியந்தகுணம்
> எட்டிலங்க வைத்த இறைபோற்றி" [104]ஆ

கல்லால நிழலின் கீழ் அமர்ந்து, சனகாதி முனிவர் நால்வர்க்கும் நான்கு வேதங்களின் பொருள் உரைத்தும், அழகிய தம் திருத்தோளில் இனிய மணங்கமழும் மாலையணிந்து தென்முகம் நோக்கி அமர்ந்துவிளங்கும் பெருமான் என்பார்.

தாயுமானவரும் குருமரபின் வணக்கம் கூறுகையில்,

---

104. திருவாசகம், திருச்சாழல், பாடல் எண் ; 20

104ஆ. பதினோராந்திருமுறை – போற்றித் திருக்கலிவெண்பா– பாடல் வரி- 38-41

"தூய்ய சரமலராற் சொல்லாமற் சொன்ன உண்மை
ஐயனைக் கல்லாலரசை யாமணைவ தென்றாளோ"[105]

என குருமூர்த்தியை அடையும் ஆர்வத்தை வெளிப்படுத்துகிறார்.

மணிவாசகப் பெருமானும்

"கோகழி ஆண்ட குருமணி தன் தாள் வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாழ்வாழ்க"[106]
என இறைவன் கல்லால நிழலில் குருவாய் வந்து தன்னை ஆட்கொண்டதைக் கூறுகிறார்.

அகநானூறும்

"ஞாலம் நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆலமுற்றம்"[107]

ஆல முற்றத்தின் கீழ் அமர்ந்து உலகத்தவர் போற்றும். நான்கு மறைகளாகிய பழமைவாய்ந்த வேதங்களுக்குப் பொருளுரைத்த முக்கண் பெருமான் என்பர்.

புறநானூற்றில் :

"ஆலமர் கடவுள் அன்ன" என்ற பேரிச்சாத்தனார் பாடலாலும் இறைவன் கல்லால மரத்தின் கீழிருந்து வேதம். உரைத்த செய்தியை அறியலாம்.

இனிக் காஞ்சிபுராணம் காட்டும் சிவகுருவடிவத்தை காண்போம்

"அடுத்தங் குடனாம் பரம் பொருளை
யன்றே விரவ வொட்டாமல்
தடுத்து முக்கூற் றுயிருணர்வைத்
தகையு மவிச்சை முழுதிரிய

---

105. சைவ இலக்கியக் கோவை. குருமரபின் வணக்கம், பாடல் எண் 1
106. திருவாசகம், சிவபுராணம்-பாடல் வரி 3-4.
107. அகநானூறு—பாடல் எண் ; 181
108. புறநானூறு பாடல் எண் : 198.

மடுத்த கருணைத் திரு நோக்கின்
மாணாக் கருக்குப் பொருளுரைப்ப
எடுத்த கரத்தான் வீற்றிருக்கு
மிலகு ளீசன் திருவுருவம்''[109]

உயிர்கட்கு உடனாய் இருந்த அருளுகின்ற இறைவனை, உயிரை அறிய வொட்டாமல் தடுத்து மறைக்கின்ற ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களும், சிவகுருவின் திருநோக்கத்தால் முழுவதும் அகன்றிடவும் சனகாதி முனிவர்களுக்கு வேதாகமத்தில் பொருளை, தமது எடுத்த கரமாகிய 'சின்' முத்திரையால் பொருள் விளங்குமாறு அருள் நோக்கம் செய்யும் கல்லால மர நிழலில் வீற்றிருந்து அருள்பாலிப்பவராகிய சிவகுரு மூர்த்தியின் திருவுருவம்.

11. விஷாப ஹரணர் (நஞ்சுகண்டகண்டர்)

சிவமஹா புராணம் 'நஞ்சுகண்ட கண்டர்' வரலாற்றை கீழ்வருமாறு எடுத்தியம்புகிறது.

சிவபிரானிடத்தில் நீங்காத திடபக்தியுடன் முனிவர்கள் யாவரும் ஒரு உச்சிக்காலப் பொழுதில் இறைவனை போற்றி வழிபட்டனர். அப்போது வாயுதேவன் ''ஓம் நீலகண்டாய நம'' எனப் போற்றிதுதித்தமை கேட்டு முனிவர்களும், தேவர்களும், தாங்கள் 'நீலகண்டா' எனக்கூறிய—தன் கருத்து என்ன ? அதை நாங்கள் அறிய விரும்புகிறோம். அவ்வரலாற்றினை எங்களுக்கு விளக்கியருள வேண்டும் எனப்பணிவுடன் கேட்டனர். அதற்கு வாயுதேவன, கார்த்திகை மாதரிடம் வளர்ந்தவரும், மயில்வாகன முடையவரும, கிரௌஞ்சகிரியை தம் வேலாயுதத்தினால் பிளந்தவரும், அசுர வம்சத்தை அழித்து தேவர்களைக் காத்தவரும், தேவசேனாபதியாகிய முருகக் கடவுளிடம், பிரம்ம தேவனின் புதல்வரான வசிட்டமுனிவணங்கி நீலகண்ட வரலாற்றை உலகம் அறியும் பொருட்டு எனக்கு கூறவேண்டும் எனக் கேட்டுக் கொள்ள, முருகப் பெருமான், தம் தாய் தந்தையர்களுக்கு இடையில் நிகழ்ந்த உரையாடலை விளக்கலானார்.

பார்வதி தேவி இறைவனிடம் தங்கள் கண்டம் கார்கால மேகம்போல் கறுத்து விளங்குவதற்கு காரணம்யாது? அதனை எனக்குத் தெரிவிக்க வேண்டும் என்று கேட்க, சிவபெருமான்

109. சிவநெறிச் செய்யுட்திரட்டு, பாடல் எண்: 617—பக்க—119,

"முன்பு தேவர்களும், அசுரர்களும் பாற்கடலில் அமுதம் வேண்டி, மந்தரகிரியை மத்தாக நட்டு, வாசுகி எனும் பாம்பினை கடை கயிறாகவும் பூட்டி, அதன் வாய்ப்புறத்தில் அசுரரும் வர்ல்புறத்தில் தேவருமாக நின்று பாற்கடலைக் கடைந்த காலத்து, இருபுறமும் இழுக்கும் விசை தாளமாட்டாமல், தன் வாயிலிருந்து விஷத்தைக் கக்கியது. அவ்விஷம் மேகம்போலக் கருத்தும் கரிய மலைபோல பருத்தும்பிறளய காலாக்கினி போல கோர வடிவாகி, காலகூடம் என்னும் பெயர் பெற்று, மிகுந்த வேகமாகவும், யாவற்றையும் அழிக்கத்தக்கதாக தோன்றிவர அதனைக் கண்டு தேவர்கள், அசுரர்கள், அஞ்சி ஓடி பிரம-தேவனிடம் முறையிட பிரம்ம தேவன், உன்னிடம் சரணாகதி-யடைந்து என்னை பலவாறு தோத்திரம் செய்து போற்றி வழிபட்டவர் திருமால். அவ்விஷம் தோன்றிய வேகத்திலேயே கருமை நிறம் அடைந்தார். மூவுலகங்களிலும் அதன் வேகத்தைத் தவிர்க்க வல்லவர் எவரும் இல்லை. உலக நலன் கருதி தாங்களே அவ்விஷத்தை அருந்த வேண்டும் எனபிரம்மதேவன் கேட்டுக்-கொள்ள அவ்விஷத்தை நான் அருந்தி தேவர் முனிவர் யாவரை-யும்காத்தருளினேன். அப்போது பிரமதேவன் 'சுவாமி' அவ்விஷம் தங்கள் கண்டத்தில் இருப்பது அழகாக இருக்கிறது! என்று கூறியதால் நானும் கண்டத்தில் இருத்தினேன். அதனால் எனக்கு 'நீலகண்டன்' எனப் பெயர் விளங்குவதாயிற்று என்று கூறினர். மேலும் இந்த 'ஓம் நீல கண்டாய நம', எனும் எட்டெழுத்தை கூறி பக்தியுடன் என்னை வழிபடுபவர்கள் உலகில் தோன்றும் பீடை யொழிந்து, உலக காரியங்களில் வெற்றிபெற்று நற்கதியடைவார்கள் என திருவாய்மலர்ந்-தருளியதாக சிவ மஹாபுராணம் நீலகண்ட வரலாற்றை எடுத்துக் காட்டும்.

இவ்வரலாற்றினை சங்க இலக்கியங்களும் பக்தி இலக்கியங்களும் தெளிவுபட எடுத்தியம்பும்.

அதியமானுக்கு நெடுநாள் வாழ் நாள் தரக்கூடிய நெல்லிக்கனி ஒன்றை ஔவையார் ஈந்து அவனை வாழ்த்தும் புறநானூற்றுப்பாடலில்

"நீலமணிமிடற் றொருவன்போல்
மன்னுக பெரும நிலமிசையானே"[109]

109. புறநானூறு — பாடல் எண்: 91

நீலமணி போன்ற அழகிய மிடறு கொண்ட இறைவனைப் போல் நெடுநாள் இப்பூ உலகில் வாழ்வாயாக என வாழ்த்துவார்.

திருநாவுக்கரசு சுவாமிகள்

"நீலஞ்சேர் கண்டனார் தாம் நீண்டெரியாடுமாறே"[110]

என்றும்

"வானத் தவருய்ய வன்னஞ்சை உண்டகண்டத்திலங்கும்[111]

விண்ணவர்கள் நலமுடன் வாழ கொடுமைவாய்ந்த நஞ்சினைத் தாம் உண்டு கண்டத்தில் நிறுத்திய பெருமான் என்பார்.

"காரேறு கண்டத்தார் காமர் காய்ந்த
கண்விளங்கு நெற்றியார் கடல் நஞ் சுண்டார்[112ஏ]
"உண்டதோர் நஞ்ச மாகில் உலகெலாம் உய்ய
உண்டான்[112பி]

இறைவன் உண்டது நஞ்சாக இருப்பினும், அதனால் உலக உயிர்கள் அழிந்துபடாமல் பிழைத்துவாழ வழிவகுத்தான் என்பார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் :

"கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோள ரவ்வுசுற்றிக் கடைந் தெழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீல மார்கடல் விடத்தினை யுண்டு
கண்டத்தே வைத்த பித்தநீசெய்த
சீலங் கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப்புன் கூருளானே"[112சி]

எனப் பாற்கடல் கடைந்து, ஆலகாலநஞ்சினை உண்டு, தம் கண்டத்தில் வைத்தருளிய சிவபெருமானே, நினது இச் சீலமிக்க செயலைக் கண்டு அழகிய செழுமைமிக்க வயல்களால்

---

110. அப்பர் தேவாரம், கோயில் பதிகம், பாடல் எண் 10
111. ,, ,, ,, பாடல் எண் 6
112.ஏ ,, ,, ,, ,, 4
112பி. ,, ,, பாடல் எண் 7
112சி. சுந்தரர் தேவாரம், திருப்புன்கூர் பதிகம் பாடல் எண்: 5.

சூழப்பட்ட திருப்புகூர் என்னும் தலத்தில் எழுந்தருளி-யிருக்கும் சிவலோக நாதன் எனும் திருப்பெயர் தாங்கிய பெருமானே உனது திருவடியை அடைந்தேன். எம்மைக் காத்-தருள்வீர் எனப்பரவுவார்.

> "ஓதக் கடல் நஞ்சினை உண்டிட்ட
> பேதைப் பெருமான் பேணும் பதியாம்"[113]

பிறர் வெறுத்தொதுக்கும் நஞ்சினை தாம் ஏற்று உண்டதால், இறைவனைப் பேதைப்பெருமான் என விளிக்கின்றார்.

> "நஞ்சுண்டு தேவர்க் கமுதம் கொடுத்த
> நலம் ஒன் றறியோம்"[114]

கொடிய நஞ்சை தாம் உண்டு, நீண்டகாலம் வாழக்கூடிய அமுதத்தை தேவர்களுக்கு அளித்த, தன்மையையாம் அறியோம் எனப்போற்றுவார்.

மணிவாசகப்பெருமான்:

> "நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி"[115]

இங்கு விடத்தையே அமுதமாக அருந்திய பெருமானே போற்றி என போற்றித்துதிப்பார்,

> "கோலால மாகிக் குரைகடல் வாய் அன்றெழுந்த
> ஆலாலம் உண்டான் அவன் சதுர்தான் என்னேடீ
> ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
> மேலாய தேவரெல்லாம் வீடுவர்கண் சாழலோ"[116]

இறைவன் ஆலகால விடத்தை தாம் ஏற்று பருகியிராவிடில் திருமால், பிரமன், மற்றுமுள்ள தேவர்கள் யாவரும் தாம் இருந்த இடம் தெரியாமல் அழிந்திருப்பார்கள் என்பதை இப்பாடலால் எடுத்துக் காட்டுவார்.

---

113. சுந்தரம் தேவாரம், திருச் சோற்றுத் துறைப்பதிகம்,பாடல் எண்: 6
114. ,, திருப்பரங்குன்றம் ,, 4
115. திருவாசகம், போற்றித்திரு அகவல் வரி;—17
116. " —திருச்சாழல் " — 8

காரைக்கால் அம்மையார் இறைவன் வடிவழகை

''காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக் கற்றை மற்றவர்க்கு
வீங்கிருளே போலும் மிடறு.[117]

காலை நேரத்தில் தோன்றும் வானம் போன்ற சிவந்த மேனியும், நண்பகலில் தோன்றும் வானம்போல் வெண்மையான திருநீறு, மாலையில் காணப்படும் ஆகாயம் போல் செந்திறம் உடைய சடைமுடியும், நள்ளிரவில் மிக்கு விளங்கும் இருளைப்போல் மறுப்பொருந்திய கழுத்தும், எனக் கூறுமிடத்து இருளைப்போல் கழுத்து எனக் குறிப்பிட்டமையால் அது நீல கண்டத்தை உணர்த்திற்று என்பதை உணரலாம்.

இனி காஞ்சிப்புராணம் காட்டும் நஞ்சுண்ட கண்டரை காண்போம்.

''நவிலோம் நீல கண்டாய
நமவென் றியம்பும் எட்டெழுத்தும்
நுவல்வார் மீள மலக்கூட்டில்
நுழையா வாறு பெறவிமையோர்
கவலா திரங்கி யாலாலங்
கதிர்ப்பூங் கரத்தி னேந்தியரிச்
கவலா ரணையின் வீற்றிருக்குஞ்
சோதிச் சுடரோன் திருவுருவம்''. [118]

'நீலகண்டாயநம' எனும் எட்டெழுத்தை கூறி இறைவனை வழிபடும் அடியவர், மீண்டும் பிறவாத தன்மை எய்தி இறைவன் திருவடிக்கீழ் என்றும் பேரானந்த பெருவாழ்வு பெறுவர். மால், அயன் உள்ளிட்ட தேவர்கள் அனைவரும் இரங்கி மகிழ்வுடன் வழிபட, தம் பசுமையான செங்கதிர்போன்ற கரத்தில் ஆலகால விஷத்தை ஏந்தியுண்டு அதைத் தம் கழுத்தில் நிறுத்தி அடக்கி அரியணையில் வீற்றிருந்து அருளும் சோதிச் சுடரோனாகிய இறைவனது திருவுருவம். இவ்வெட்டெழுத்து மந்திரத்தை இடை

117. காரைக்காலம்மையார்.அற்புதத்திருவந்தாதிபாடல்எண்:65
118. சிவநெறிச் செய்யுட்திரட்டு—பாடல் எண்: 618-பக்.-119.

விடாது ஓதிப் பேறு பெற்றவர் 'திருநீலகண்டம் குயவநாயனார்' என பெரிய புராணம் பேசும்.

12. சலந்தராரி (சலந்தரற் செகுத்தோன்)

சிவபுராணம் சலந்தரன் எனும் அசுரன் அழிக்கப்பட்ட செய்தியை தெரிவிக்கிறது.

சிவபெருமான் திரிபுர அசுரர்களின் கோட்டைகளை தம் நெற்றிக் கண்ணால் எரித்தழித்தபோது, அச்சிவந்த நெருப்புப் பொறி, சிந்துநதி கடலுள் கலக்குமிடத்தில் விழ, அச்செந்நிறப் பொறியிலிருந்து சலந்தரன் குழந்தையாய் உருவெடுத்தான். பின்வளர்ந்து காலநேமி மகளான பிருந்தா என்பவளை மணந்து இவ்வுலகத்தில் மிகப் புகழ்வாய்ந்த அரக்கர்குல அரசனாக விளங்கினான்.

இராகு (நவகோள்களில் ஒன்று) ஒருமுறை தன் ஊனமுள்ள உடலுடன் வருகை தந்து, தனது தவறான செயலால் பாற்கடலை தேவரும், அசுரரும் கடைந்த காலத்தில் தான் தண்டனைக்குட்பட்டதாகவும் பின் தேவர்கள் இரத்தினக் கற்கள் போன்ற விலை மதிக்கமுடியாத பொருட்களை கவர்ந்து சென்று விட்டதாகவும் கூறினான்.

இச்செய்தியை அறிந்த சலந்தரன் போர்க்கோலங்கொண்டு தேவர்களைத் தாக்கினான். போர் செய்ய இயலாத தேவர்கள், திருமாலிடம் முறையிட, திருமால் சலந்தரனிடம் போர் செய்ய இயலாது என அவன் விரும்பியதைத் தருவதாகக் கூற, உமது மனைவியாகிய இலக்குமியும் நீயும் என் தலைநகரில் வந்து தங்கியிருக்கவேண்டுமெனக் கேட்டுக் கொண்டான்.

தேவர்கள், சிவபெருமான் ஒருவராலேயே இவ்வசுரன் அழிக்கப்படவேண்டும் என எண்ணி, நாரதரைக் கொண்டு சிவ பெருமானுக்கும், அசுரர்களுக்கும், பகை உணர்வை தூண்டி விட்டு, நாரதர், சலந்தரனிடம் சென்று பார்வதி தேவியின் அழகினைப் பலவாறாகப் புகழ்ந்து, அவளே உனக்கேற்றவள் எனப் புகழ்ந்துரைத்தார்.

மதிம யக்கமுற்ற சலந்தரன், பார்வதியை தன் மாளிகைக்கு அனுப்புமாறு சிவபெருமானுக்கு செய்தி அனுப்பினான். சிவ பெருமான் மிகுந்த கோபங் கொண்டு தம் பூதகணங்களை போர் செய்ய அனுப்பி வெற்றிபெற இயலாததால், பின் அப் பெருமானே போர்க்கோலந்தாங்கிச் சென்றார்.

இதற்கிடையில் சலந்தரன், தன் மாயையால் தம் படை-வீரர்களில் ஒரு பகுதியினரை கந்தர்வர்களாகவும், மோகினி களாகவும் உருக் கொண்டு, சிவபெருமானை மகிழ்வடையச் செய்தால், இறைவன் அவ்விசையில் மயங்கி தம் ஆயுதங்களை நழுவ விட்டுவிடுவார், பின் பார்வதி தேவியை சிறை யெடுக்கலாம் என எண்ணி சிவபெருமானின் உருவமெடுத்து, பார்வதி இருக்குமிடம் அடைந்தான். வந்திருப்பது சிவபெருமான் அல்ல என உணர்கிறாள். அப்போது திருமால் அங்கு தோன்ற, பார்வதியம்மை, சலந்தரனின் மனைவியான பிருந்தாவை சிறை யெடுத்துச் சென்றுவிடுமாறு தெரிவிக்க, திருமால் அவளைச் சிறையெடுத்தார். தன்மானமிழந்த பிருந்தா... .

''உனது அவதாரங்களில் ஒன்றில் உன் மனைவி பிறன் ஒருவனால் கவர்ந்து செல்லப்பட்டு, அவனது பிரிவால் நீ பெருந்துயரடைவாய்'' எனச் சாபமிட்டு உயிர் துறந்தாள். (இராமவதாரத்தில் திருமாலாகிய இராமபிரான், சீதையை இராவணன் சிறையெடுத்ததால் ஏற்பட்ட பிரிவுத் துயரத்தால் மிகவும் வருந்தியதை 'இராமகாதை' எடுத்துக்கூறும்.)

இதற்கிடையில் அரக்கரது மாயையாகிய ஆடல், பாடல் களாகிய இசையின் மயக்கத்தினின்றும் தெளிந்த சிவபெருமான், போர்க்கோலங் கொண்டு பாற்கடலினின்று தமக்கு கிடைக்கப் பெற்ற சக்கராயுதத்தால் சலந்தரனை இரு கூறாகப் பிளந்து அழித்து தேவர்களைக் காத்து அருள்புரிந்தார் என்பது வரலாறாகும்.*

இவ்வரலாற்றினைப் பக்தி இலக்கியங்களும் எடுத்தியம்பும்.

*Elements of Hindu Icomography, Second Edition
Volume II. Part I-Author : T.A. Gopinatha Rao
Page No. 188 to 190.

**திருநாவுக்கரசர்**

> "கற்பொலிதோள் சல்ந்தரனைப் பிளந்த ஆழி
> கருமாலுக் கருள் செய்த கருணை யான் காண்"[124]

> எனக் கல்போன்ற வலிய தோள் வலிபடைத்த சலந்தரனை
> இரு கூறாகப் பிளந்த சக்கராயுதத்தை, கரிய திருமாலுக்கு
> வழங்கி அருள் செய்த கருணையே வடிவான பெருமான்
> எனப் போற்றுவார்.

சலந்தரனை செகுத்தோனாகிய இறைவனை,

**திருநாவுக்கரசர்**

> "சமரமிகு சலந்தரன் போர் வேண்டினானைச் சக்கரத்
> தாற் பிளப்பித்த சதுரர் போலும்"[119]

இறைவனோடு போர் செய்யக் கருதிய சலந்தரனை தமது சக்கரத்தால் இரு கூறாகப் பிளந்த தன்மையினை எடுத்து மொழிவார்.

> "வானோர், உய்ய சலந்தரனைக் கொல்வதற்கு
> முன்னோ, பின்னோ தன் ஆரூர் கோயிலாக்
> கொண்ட நாளே"[120]

வானோர் உய்வு பெற, சலந்தரனைக் கொல்வதற்கு முன்னோ அல்லது பின்னோ, நீர் திருவாரூர் கோயிலாகக் கொண்ட நாள் என ஐய வினாத் தொடுப்பார்,

> "உரமதித்த சலந்தரன் தன் ஆகங் கீண்ட வேராழி
> படைத்தவன் காண்"[121]

---

119. அப்பர் தேவாரம், திருவீழிமிழலைப்பதிகம், பாடல் எண் 2.
120. ,, திருவாரூர் ,, 7
121. ,, திருஇராமேச்சுரம் 10

சலந்தரனை இரு கூறாகப் பிளந்த தன்மை கொண்ட சக்கரப்படையையுடையான் இறைவன் என்பார்.

மணிவாசகப் பெருமான்;

''சலமுடைய சலந்தரன்தன் உடல் தடித்த நல்லாழி''[122]

தீய எண்ணங்கொண்ட சலந்தரனின் உடலை இரு கூறாகப் பிளந்து நன்மைபயக்கத்தக்க சக்கரப்படை என்பார்.

பட்டினத்தடிகள்

''வலந்தரு காலனை வதைத்தனை என்றும்
சலந்தரன் உடலந் தடித்தனை என்றும்''[123]

காலனைமார்க்கண்டேயன்பொருட்டு காலால் உதைத்தும்,சக்கரத்தால் சலந்தரன் உடல் இரு கூறாகப்பிளந்த தன்மையும் காட்டுவார்.

நக்கீர தேவ நாயனார்

''கெட்ட அரக்கரே வேதியரே கேளிர்கொல்
பட்டதும் ஓராது பன்டொருநாள்—ஒட்டக்
கலந்தரனார் காளத்தி யாள்வார் மேற் சென்று
சலந்தரனார் பட்டதுவுந் தாம்''[1]

தீயவைபுரியும் அரக்கரானாலும், வேதியரானாலும் நான் கூறுவதை செவிமடுப்பீர்களாக' முன்பொருநாள் கண்ணப்ப நாயனார், காளத்தியப்பருக்கு பன்றி இறைச்சியை பக்குவப்படுத்தி வழிபட்ட தன்மை கண்ட வேதியர் பதைப்புற்று நடு நடுங்கி தாம் பட்டபாட்டையும். இறைவனை எதிர்த்து போர் செய்து சக்கரத்தால் அழிவுற்ற சலந்தரன் என்னும் அரக்கன் பட்ட பாட்டையும் எண்ணிப் பாருங்கள் என்பார்.

---

122. திருவாசகம் — திருச்சாழல் — பாடல் எண் : 18

123. திருவிடைமருதூர் மும்மணிக் கோவைப்பாடல்வரி 9-10

1. பதினோராந்திருமுறை — கயிலைபாதி — காளத்திபாதித் திருவந்தாதி பாடல் எண் ; 84.

நக்கீர தேவ நாயனார்

"சலந்தரன் உடலந் தான் மிகத் தடிந்தும்
மறைபயில் மார்க்கண்டேயனுக்கு கருளியும்
தாருகற் கொல்லமுன் காளியைப் படைத்தும்"[2]
சலந்தரனைதம் சக்கராயுதத்தால் இரு கூறாகப் பிளந்தும்
மார்க்கண்டேயனுக்காக, காலனை காலால் உதைத்
தருள்புரிந்தும், தாருகாசுரனை கொல்வதற்காக
காளி தேவியை படைத்தருளியும் என்பார்.

நக்கீரதேவ நாயனார் :

"வலந்தருமால் நான்முகனும் வானவருங்கூடி
அலந்தருமால் கொள்ள அடர்க்கும்—சலந்தரனைச்
சக்கரத்தால் ஈர்ந்தரிமன் தாமரைக்கண் சாத்துதலும்
மிக்க அஃதீந்த விறல் போற்றி" [3]

திருமால் நான்முகன், மற்றுமுள்ள தேவர்கள் அனைவருங்கூடி
உலகத்தை துன்பத்திற்குள்ளாக்கிய சலந்தரனைஅழித்து
எங்களைக் காத்தருள வேண்டுமென இறைவனிடம் வேண்ட அவ்வரக்கனை
தம் சக்கரத்தால் இரு கூறாகப் பிளந்து தேவர்களைக் காத்தும்
தம் தாமரை மலர்போன்ற கண்ணினை தோண்டி எடுத்து
இறைவன் திருவடியில் சாத்தி வழிபட்ட திருமாலுக்கு அச்சக்கரத்தை வழங்கி அருள்
புரிந்த வலிமை போற்றி எனப் பெருமானைப்போற்றிப் பரவுவார் நக்கீரர்.

சரபுராணம், சலந்தரனை இறைவன், தம் சக்கரத்தால் பிளந்த காட்சியினை அழகுற எடுத்துக் காட்டும்,

"நீல மால்வரை யிரண்டென நீண்டபே ருடலங்
கோலு மாபிரு விரண்டுருக் கொடுகிடந் தென்னப்
பால நேத்திரன் சக்கரப் படைபிளந் திடலாற்
றால் முய்ந்திடக் கிடந்தன சலந்தர னுடலம்" [124]

2. பதினொராந்திருமுறை—கோபப்பிரசாதம்—பாடல்வரி 35—37
3. பதினொராந்திருமுறை—போற்றித்திருக்கலிவெண்பா—பாடல் வரி: 23—26
124. சரபபுராணம்—சலந்தரன் வதைச்சருக்கம்—பாடல் எண் ; 90

இனி காஞ்சிப்புராணம் காட்டும் சலந்தரச்
செருந்தோன் திரு உருவத்தைக் காண்போம் :

''இருகூறாகச் சலந்தரனை
பிறுத்து மாட்டி யவ்வடிவம்
அருகே தோன்றச் சுதரிசனம்
அங்கைத் தலத்தில் மிசையேந்தி
முருகார் கடுக்கைத் தண்ணறும்பூந்
தொடையல் வாகை முடிவிளங்க
திருவார் காட்சி யளித்தருளும்
தேவர் கோமான் திருவுருவம்''[125]

சலந்தரன் என்னும் அசுரனை தனது சக்ராயுதத்தால் இரு கூறாகப் பிளந்து அவ்வடிவமானது தனது அருகே தோன்று மாறு தனது ஒரு கரத்தில் சக்ராயுதம் ஏந்தியும், அழகு பொருந்திய தமது சடாமுடியில் தேன் பொருந்திய கொன்றைப் பூக்களால் தொடுக்கப்பட்ட மலர்மாலையை அணிந்தும், தன்னைக் காண்பவர்கள் தொழுதேத்தும் காட்சி அளித்தருளும் விண்ணவர் கோமானின் திருவுருவம். என இறைவனின் திருவுருவத்தைக் காஞ்சிப்புராணம் காட்டும்.

## 13. சக்கரதானர்

### (அரியினுக்கு ஆழி அளித்தோன்)

''உயிர்கள் போற்றி வணங்கித் தொழுதேத்தும் ஒரே தலைவன், அவன் ஏகநாயகன், அவன் தேவர்கட்கெல்லாம், அரசன், எனது உயிரினை வாழவைக்கும் அமுதம், இணையில்லாத சிவபோகம் என்னும் பேரின்பம்தரும் தலைவன், திருமாலுக்கு அருள் செய்து அத்திருமாலையே காளை வாகனமாக ஊர்ந்தவன், திருவீழிமிழலையில் உள்ள விண்ணிழி விமானத் திருக்கோயிலில் எழுந்தருளும் யோக நாயகன். அவனையன்றி வேறு ஒன்றையும் நான் பொருளாக மதியேன்'' என்று சேந்தனார் முதற்பாடலிலேயே கூறுவர்.

125. சிவநெறிச் செய்யுட்திரட்டு — பாடல் எண் ; 619-பக் 119

"ஏக நாயகனை இமையவர்க்கரசை
என்னுயிர்க் கமுதினை யெதிரில்
போகநா யகனைப் புயல் வணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநா யகனை மிகுதிரு வீழி
மிழலை விண்ணழி யெழுங் கோயில்
யோகநா யகனை யன்றி மற்றொன்று
முண்டென வுணர்கிலேன் மனே"[126]

திரு வீழிமிலையில் உள்ள கோயில் விமானம் 'விண்ணழி-விமானம்' என வழங்கப்படுகிறது. விண்ணுலகிலிருந்து இவ்-விமானத்தை திருமால் கொணர்ந்தமையால் அப்பெயர் பெற்றது.

திருமால் நாள்தோறும் ஆயிரம் தாமரை மலர் கொண்டு அருச்சித்து வழிபாடு செய்து வந்தார் எனவும் ஒரு நாள், அம்-மலர்களில் ஒன்று குறையவே திருமால் தம் தாமரை போன்ற கண்களில் ஒன்றினைப் பெயர்த்து அர்ச்சனை புரிந்தார் எனவும், திருமாலின் மெய் அன்பை உணர்ந்த சிவபெருமான் மாலுக்கு சக்கரப்படையை அருள் செய்தார் என அப்பர் பெருமான் கூறுதல் இங்கே காணலாம்.

"நீற்றினை நிறையப் பூசி நித்தலாயிரம் பூக்கொண்டு
ஏற்றுழி ஒருநாள் ஒன்று குறையக் கண் நிறைய இட்ட
ஆற்றலுக்கு காழிநல்கி அவன் கொணர்ந்திழிச்சுங்கோ
வீற்றிருந் தளிப்பர் வீழிமிலையுள் விகிர்தனறே" [127]

இச் செய்திகளை பட்டினத்துப் பிள்ளையாரும் தம் 'திரு-விடைமருதூர் மும்மணிக் கோவையில் :

"கரத்தினில் மாலவன் கண் கொண்டு
நின் கழல் போற்ற நல்ல
வரத்தினை ஒப்புநோக்கத்தகும். ஈயும் மருதவப்பா "[128]
எனக்குறிப்படுவது

126. சைவபக்தி இலக்கியக் கோவை — சேந்தனார்
திருப்பல்லாண்டு, பாடல் எண் ; 1
127. அப்பர் தேவாரம், திருவீழிமிழலைப் பதிகம், பாடல் எண் 8
128. பட்டினத்தார், திருவிடைமருதூர் மும்மணிக் கோவை

திருமால் ஆயிரம் மலரால் அருச்சித்து வழிபட எண்ணி, அம் மலர்களின் ஒன்று குறையுமாறு இறைவன் திருவருள் செய்ய, தம் தாமரை மலர்போன்ற ஒரு கண்ணினைத் தோண்டி இறைவர் திருவடியில் சாத்தி வழிபட்டதால், சுதரிசனம் எனும் சக்கரத் தினை திருமாலுக்கு வழங்கியதை சரபபுராணம் எழிலுற எடுத்-தியம்பும்.

''நிலவுதவழ் முடியமல னின்கருத்தி னைவறிலான்
மலர்களா யிரத்தி லொரு மலர் குறைய வருள்செய
முலைவுதருமனத்தினானயுடையான்றன்விளையாட்டோ
வலைவுதருந் தீவினையோ யாவோவென் றகத்
தென்னி'' 128ஆ

''முட்கமல பவற்றந்தோய் மறந்தனை கொல்
முதிர்தவத்தோ
ருட்கமல முட்கறிய மகிகுலையா துளமுருகித்
தட்கமலத் தலர்தவளத் தனிக்கமல மெனக்கருதிக்
கட்கமல மிடந்தமலன் காற்கமல மிசை சாத்தி'' 128இ

எனவும்

''ஒருபதினா யிரம் பதங்க ரொருகாலத் துதித்தனென
மருவுகதிர் சக்கரமு மலரனைய விலோசனமுந்
திருவருளி னாற்கொடுத்தான் சித்தாகி யசித்தாக்
யிரு வகையுங் கடந்தெவர்க்கு மெய்தாத தனிமுதல்வன்''
128ஈ

சுந்தரமூர்த்தி சுவாமிகள் :

திருமகள் கோன் நெடு மால்பல நாள் சிறப்
பாகிய பூசனை செய் பொழுதில்
ஒருமலர் ஆயிரத் திற்குறைவா நிறை
வாக ஓர் கண்மலர் சூட்டலுமே

---

128-ஆ – சரபபுராணம்—சக்கரம் பெற்ற சருக்கம் பாடல் எண்:23
128-இ — மேலது மேலது பாடல் எண்:24
128-ஈ — ,, ,, பாடல் எண்:37

பொருவிறல் ஆழி புரிந்தருளித் தீர்பொழில்
ஆர்திருப் புத்தூர்ப் புனிதனீரே'' [129]

என, திருமால் தனது கண் மலர் சூட்டி, சக்கரம் பெற்ற வரலாற்றினை அழகுற எடுத்துக் காட்டுவார்.

''செருமேவு சலந்தரனைப் பிளந்த சுடர் ஆழி
செங்கன் மலர் பங்கயமாச் சிறந்தானுக்கருளி'' [130]

''பிலந்தரு வாயினொடு
பெரிதும்வழி மிக்குடைய
சலந்தரன் ஆகம் இரு
பிளவாக்கிய சக்கமுன்
நிலந்தரு மாமகள் கோன்
நெடுமாற் கருள் செய்த பிரான்
நலந்தரு நன்னிலத்துப்
பெருங்கோயில் நயந்தவனே,, [131]

என்பதால் சலந்தரனை ஈசன் தன் ஆழியால் இரு கூறாகப் பிளந்திட்ட செய்தியினையும் அந்த சக்கரப்படையையே நெடிய மாலுக்கு வழங்கியருளினான் என்ற வரலாற்றையும் படம் பிடித்துக் காட்கிறார், சுந்தரர்.

அப்பர்;

''கண்துஞ்சுங் கருநெடுமால் ஆழிவேண்டிக்
கண்ணிடத்து சூட்டக் கண் அருளுவான் காண்,, [132]

பாற்கடலில் கண்துயிலும் கரியதிருமாலுக்கு அவர் வேண்டுதலுக்கிரங்கி ஆழி அளித்தான் இறைவன் என்பதைக் காட்டுவார்.

இச்செய்தியை சுந்தரரும்

---

129. சுந்தரர் தேவாரம் திரு அடிசிற்கரைப்புத்தூர் பதிகம், பாடல் எண்; 2
130. ,, திருக்கலயநல்லூர் ,, பாடல் எண்: 2
131. சுந்தரர் தேவாரம், திருநன்னிலத்துப் பெருங்கோயில். பாடல் எண்;5
132. அப்பர் தேவாரம், திருவீழிமிழலைப் பதிகம்,பாடல் எண்;6

''திகழும் மாலவன் ஆயிர மலரால்
　　ஏத்துவான் ஒரு நீள் மலர் குறையப்
புகழினால் அவன் கண் இடந் திடலும்
　　புரிந்து சக்கரங் கொடுத்தல்கண்டடியேன்
திகழும் நின் திருப்பாதங்கள் பரவித்
　　தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகலும் வல்லினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவடுதுறை ஆதிஎம் மானே''[133].

தம்கண் பறித்து இறைவன் திருவடியிலிட்டு வணங்கிய திருமாலுக்கு சக்கரம் வழங்கியது கண்டு, உனது திருப்பாதங்கள் போற்றி எனது வல்வினைக்கு அஞ்சி உன்னைச் சரணடைந்தேன் எம்மைக் காத்தருள் புரியவேண்டுமென திருவாவடுதுறை இறைவனிடம் முறையிடுகின்றார்.

மணிவாசகப் பெருமான் :

''சலமுடைய சலந்தரன்தன் உடல் தடித்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடி
நலமுடைய நாரணன்தன் நயனமிடந் தரனடிக்கீழ்
அலராக இட ஆழி அருளினன் காண் சாழலோ''[134]

நாரணன் அன்று இறைவன் திருவடிக்கீழ் தமது கண்ணினைத் தோண்டி எடுத்து மலராக இட்டு வழிபட சலந்தரனைப் பிளந்திட்ட சக்கரத்தை திருமாலுக்கு அருளியவன் காண் என பெருமானைப் பரவுகின்றார். இனி காஞ்சிப்புராணம் காட்டும்படி காண்போம்.

''வழிதீஞ் சுவைக்கள் வாய்மடுத்து
　　மழலைச் சுரும்பா ரிசைமிழற்றுஞ்
செழிபூங் கமல மொன்றினுக்குத்
　　திருந்து காதன் மெய்யன்பின்
விழிகுன் றடியி னருச்சித்த
　　விறன்மா யனுக்குச் சுதரிசனங்

133. சுந்தரர் தேவாரம். திருவாவடுதுறைப்பதிகம், பாடல் எண்;3
134. திருவாசகம், திருச்சாழல் பாடல் எண்; 18

கழியே ரருளா லீந்தருளுங்
கடவுட் பெருமான் திருவுருவம்''[135]

வண்டினம் தேனினை உண்டு சுவைத்து இனியஓசையினை (ரீங்-காரம்) எழுப்புகின்ற செழுமைமிக்க தாமரைமலர் ஒன்றினுக்காக-உயர்ந்த உண்மை அன்பின் மிகுதியால் தனது கண்ணினைப் பெயர்த்து தெடுத்து இறைவன் திருவடியில் படைத்து வழிபட்ட திருமாலுக்கு தனது மிகுதியான பேரருளால் சக்கரப்படையை வழங்குகின்ற கடவுட் பெருமானாகிய சிவபெருமானின் திருவுருவம் என்றவாறு.

14. அந்தகாசுரஹரணர் (அந்தகனைச் செற்றோன்)

சிவபெருமானின் கண்களை இறைவி விளையாட்டாக தமது கரத்தால் மூடிய அவ்வினாடியே அகில உலகங்களும் இருள் சூழ்ந்தன. இறைவியின் அச்சத்தால் வியர்வை தோன்ற, அவ்வியர்வையிலிருந்து, காண்பதற்கு அருவருக்கத்தக்கவனும், நீண்ட சடாமுடியும், கருமைநிறமும், அழுகையும், சிரிப்பும் கொண்டு பிரளயகால இடி போன்ற குரலையுடையவனாகவும், கண்களில்லாத வனாகவும் அந்தகாசுரன் கோரமான உருவத்-துடன் அவதரித்தான்.

அவ்வாறு தோன்றியவனை நோக்கி பார்வதிதேதி இறை-வனிடம், இவன்யார்? என்று வினவ, சிவபெருமான் இறைவியை நோக்கி " இவன் மகா பராக்கிரமசாலி என் விழிகளை நீ மூடினையே, அப்பொழுது உன் கைவியர்வையில் உண்டாகி, 'அந்தகன்' என்னும் பெயர் பெற்றான். இவனுக்கு நானே தந்தை" என்று திருவாய் மலர்ந்தருளினார். இறைவியும் தன் புதல்வனைப் போலப் பாதுகாத்தாள்.

பின்னர், இரணியாட்சன் புத்திரப் பேறின்றி இறைவனை துதிக்க, அந்தகனை அவனுக்கு புத்திரனாகும்படி அருள்புரிகின்றார். இரணியாட்சனுக்கு பின்னர் அந்தகன் பட்டமேற்று தவம் செய்து பிரமனை வழிபட்டு நல்லுருவம் பெற்றும் பல அரிய வரங்களைப் பெற்றும். அனைத்து உலகங்களை வென்றும், முடிவின் சிவபெருமானையே எதிர்த்து இறைவனது திரிசூலத்

135. சிவநெறிச் செய்யுட்திரட்டு பாடல் எண்: 620-பக்-129.

தால் அழிக்கபடுகையில், நல் உணர்வுடன் சிவபெருமானை போற்றித்துதித்து வழிபட்டு முக்தியடைந்ததாக,சிவமகாபுராணம், அந்தகனது வரலாற்றைக் கூறுகிறது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள்

"அருமலரோன் சிரம் ஒன்றறுத் தீர் செறுத்
தீரமுற் சூலத்தால் அந்தகனை"[136]

பிரம்மதேவனின் ஒரு சிரத்தைக் காலபைரவனாகிக் கிள்ளி எடுத்ததையும், திரிசூலத்தால் அந்தகனை அழித்ததையும் குறிப்பிடுவார்.

"இருள்மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி
இந்திரனைத் தோள் முரித்த இறைவன்,....,[137]

மணிவாசகர்

அயனை அநங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கண் மாயாவடுச் செய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ"[138]

பிரம்மனை, மன்மதனை, அந்தகாசுரனை, சந்திரனை இறைவன் தண்டித்து ஆட்கொண்டது, தேவர்களுக்கு வெற்றியைத்தரவல்லதல்லவோ என எடுத்துக் காட்டுவார்.

நக்கீர தேவ நாயனார்:

"அதிர்த்தெழுந்த அந்தகனை அண்டரண்டம் உய்யக்
கொதித் தெழுந்த சூலத்தாற் கோத்துத்—துதித்தங்
கவனிருக்கும் வண்ணம் அருள் கொடுத்தங் கேழேழ்
பவமறுத்த பாவனைகள் போற்றி,[138-ஆ]

136. சுந்தரர் தேவாரம் திருஅர்சிற்கரைப்புத்தூர் பதிகம் பாடல் எண்:2

137. ,, திருக்கலயநல்லூர் பதிகம் பாடல் எண் 2

138. திருவாசகம். திருச்சாழல் ,, பாடல் எண்.4.

138. ... ஆ பதினொராந்திருமுறை — போற்றித் திருக்கலி-வெண்பா — பாடல் வரி - 33 -36

இறைவனோடு மாறுபட்டு போரிட ஆர்பரித்து எழுந்த அந்தகாசுரனை, உலக உயிர்கள் உய்யும் பொருட்டு தம் திரிசூலத்தால் குத்தப்பட்டு, விண்ணில் தூக்கி நிறுத்தவும், அவ்வந்தகன் வழிபாட்டுக்கிரங்கி ஏழேழ் பிறப்புக்களிலிருந்து தொடர்பறுக்கப்பட்டு, அருள்புரிந்து காத்தருளும் இறைவனது செயலைப் போற்றுவார் நக்கீரர்.

இனிக்காஞ்சிப் புராணம் காட்டும் இறைவனின் திருவுருவத்தைக் கான்போம்

''வெருவா நிகும்பன் மிசையொருதா
ளூன்றி நின்று வெஞ்சூலத்
தொரு கூர்ப் பரம்வைத் தொருகரத்தால்
உமையைத் தழுவிக் கைகூப்பு
யருகே நிற்கும் அந்தகனை
நோக்கி யரவச் சிலம்பணித்து
திருமான் முதலோர் தொழுதேத்தச்
சிறக்கு மிறையோன் திருவுருவம்'' [139]

அச்சஉணர்வோடு காணப்படும் முயலகன் மேல் ஒரு தாளினை ஊன்றியும் பகைவரை (அரக்கரை) அழிக்கத் தக்கதான திரிசூலத்தை தமது முழங்கையால் தாங்கியும், ஒரு கரத்தால் உமையம்மையைத்தழுவி விளங்கி,தம்அருகேபணிவுடன் வணங்கி நின்றிருக்கும் அந்தகாசுரனை கருணையுடன் நோக்கியும் தம்திருவடிகளில் பாம்புகளாகிய சிலம்பினை அணிந்தும், திருமால் உள்ளிட்ட தேவர்கள்,முனிவர்கள்,முதலானைவர்கள், தம் கரம் கூப்பி ஜெய ஜெய என போற்றி வழிபடுகின்ற இறைவனாகிய சிவபெருமானின் (அந்தகனைச் செற்றோன்) திருவுருவம்.

15. திரிபுராந்தகர் (முவெயிலெரித்தோன்)

ஆணவம் என்ற சகச மலமும், கர்மம், மாயை என்ற ஆகந்துக மலங்களும்ஆகிய மூன்றையும் உருவகமாக முப்புரங்கள் என்பது வழக்கு. முப்புரங்கள், பொன், வெள்ளி, இரும்பால் ஆகிய மூன்று பெருங்கோட்டைகளை வரத்தால் பெற்றமைத்து ஆண்டுவந்த அசுரர்கள் தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூவராம்.

---

139. சிவநெறிச் செய்யுட்திரட்டு—பாடல் எண்; 621—பக்·120.

உலகத்தைத் தேராகவும், சூரிய, சந்திரர்களை சக்கரங்களாகவும், வேதங்களை குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், திருமாலை அம்பாகவும், வாயுவை அம்பின் சிகரமாகவும், அக்னியை அம்பின் நுனியாகவும், பேருமலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும் கொண்டு புறப்பட்டு இம் முப்புரங்களையும் இறைவன் அழித்தான் என்பது திருபுர மெரித்த வரலாறு ஆகும்.

**திருமந்திரம்**

> ''அப்பணி செஞ்சடை ஆதி புராதனம்
> முப்புரம் செற்றனன் என்பார்கள் மூடர்கள்
> முப்புரமாவது மும்மல காரியம்
> அப்புரம் எய்தமை யாரறி வாரோ'' 140அ

முப்புரமாகிய திரிபுர அரக்கர்களின் மூன்று பெருங்கோட்டைகளை இறைவன் அழித்தான் என்பார்கள் மூடர்கள் என்றும், முப்புரம் என்பது மும்மல காரியம் என்பதால் உயிர்களுக்கு தொன்று தொட்டுவரும், ஆணவம் கன்மம், மாயை, என்ற மூன்று மலங்களும் ஆகும். அரக்கர்களிடம் இயல்பாயமைந்த இம்மலத்தைத் தான் இறைவன் அழித்தான் என்ற சித்தாந்த உண்மையை காட்டுகின்றார் திருமூல தேவர்.

**நக்கீரதேவ நாயனார்:**

> ''.......................... திரியும்
> புரம்மாளச் செற்றவனே பொற்கயிலை என்றும்
> பரமா அடியேற்குப் பற்று'' 140ஆ

திரியும்- என்பதால் திரிபுர அசுரர்களின் மூன்று கோட்டைகளும் பறக்கும் தன்மையுடையது, அத்தகைய கோட்டைகளை தம் நகையால் எரியூட்டி அழியுமாறு செய்தருளிய பெருமானே அடியவணகியஎமக்கு உம்மைப் பற்றிவாழும் பேற்றினை அருள்வாய் என்பார்.

140அ. திருமூலர் திருமந்திரம் — பாடல் எண்;
140ஆ, பதினொராந் திருமுறை —கைலைபாதி— காளத்திபாதி திருவந்தாதி—பாடல் 49

காரைக்காலம்மையார் முப்புரம் எரிந்த செய்தியை

,,அரணார் அவிந்தழிய வெந்தீ அம்பெய்தான்,,

முப்பெருங் கோட்டைகளை அரண்களாகக் கொண்டு வாழ்ந்த அசுரர்கள் வெந்தழியுமாறு அம்பெய்த பெருமான் எனப் போற்றுவார். சேந்தனார் இச் செய்தியை;

''வேந்தன் வளைத்தது மேருவில்
அரவுநாண் ,வெங்கனை செங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம்
பொடியாட வேதப்புர 'வித்தேர்ச்
சாந்தை முதல் அயன் சாரதி
கதி அருள் எனுமித் தையலை
ஆந்தன் திருவா வடுதுறை
யான் செய்கை யார் அறிகிற்பரே''[141]அ

இறைவன் மேருமலையை வில்லாகவும், வாசுகி எனும் பாம்பினை வில்லின் கட்டப்படும் நாணாகவும், திருமாலை அம்பாகவும், வேதங்களை நான்கு குதிரைகளாகவும் உலகத்தை தேராகவும், பிரமனைத் தேரோட்டியாகவும் கொண்டு முப்புரங்களையும் பொடிபடச், செய்தவன், திருவாவடுதுறைத் தலத்தின் கண் அமர்ந்த பெருமான், அவனது செயலை அறியவல்லார் யாவர்? என்பார்.

அப்பர் பெருமான்

,,எட்டாந் திசைக்கும் இரு திசைக்கும் மிறைவா முறை
என்றிட்டார் அமரர் வெம் பூசல் எனக்கேட் டெரிவிழியா,
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையும் ஓரம்பினால்
அட்டான் அடிநிழற் கீழதன் றோ என்றன் ஆருயிரே,[142]

எட்டுத்திக்குகளும் மேல், கீழ் உலகங்களையும், தனது ஆளுமையின் கீழ் கொண்டு அமரர்களை அடக்கி—ஆண்டுவந்த கயவர்களாகிய திரிபுர அரக்கர்களை தனது ஒரு அம்பினால்

141.அ சைவ இலக்கியக் கோவை, சேந்தனார், திருப்பல்லாண்டு, திருவாடுதுறை பாடல் எண் ; 6

142. அப்பர் தேவாரம், நாலாம் திருமுறை, பொது, பாடல் எண் ; 1.

அழித்த பெருமானது திருவடி நிழற் கீழ் உள்ளதன்றோ எனது ஆருயிர் எனப் போற்றுவார்.

**சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

''மூலையில் சென்ற ஞான்றுய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர் என் றேவிய பின்னை
ஒருவ நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமுழா முழக்க அருள் செய்த
தேவ தேவநின் திருவடி அடைந்தேன்
செம்பொ ழில் திருப் புன்கூர் உளானே''[143]

இறைவன் திரிபுர தகனம் செய்து அதனை ஆண்டுவந்த முப்புர அசுரர்களாகிய தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி எனும் மூவரில் இருவரை இறைவன் திருக்கோயில் வாயில் காப்பாளர்களாகப் பணிபுரியும் அருள்புரிந்தும், ஒருவரை சுடலையில் ஊழிப்பெருங்கூத்து நிகழ்த்தும் போது மணிமுழக்கவும்அருள் புரிந்து ஆட்கொண்ட பெருமானே நின் திருவடி சரணடைந்தேன், அழகிய பொழில் சூழ்ந்த திருப்புன்கூர் எனும் தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமானே, என திரிபுர அசுரர்களை ஆட்கொண்ட முறைமையை போற்றுவார்.

**நக்கீர தேவநாயனார்:**

''பருவரை சிலையாப் பாந்தள் நாணாத்
திரிபுரம் எரிய ஒருகணை துரந்தும்''[141ஆ]

மேருமலையை வில்லாகவும், வாசுகி எனும் பாம்பினை நாணாகவும் கொண்டு மூன்று புரங்களும் எரிந்து அழியுமாறு ஒரு கணை தொடுத்ததும், என முப்புரம் எரித்த வரலாற்றைக் காட்டுவார்.

---

141ஆ பதினொராந்திருமுறை—கோபப் பிரசாதம்—பாடல் வரி 15—16

143. சுந்தரர் தேவாரம், திருப்புன் கூர்ப்பதிகம், பாடல்: எண்.8

மணிவாசகப் பெருமான்:

ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற''[144] எனவும் திரிபுரம் எரித்த வரலாற்றை பக்தி இலக்கியங்கள் எடுத்துக் கூறும்.

இனி காஞ்சிப்புராணம் காட்டும் திரிபுராந்தகரின் வடிவினைக் காண்போம் :

''பொருப்புச் சிலையில் வாசுகி நாண்
பூட்டி யரிகோல் வளியீர்க்கு
நெருப்புக் கூராம் படை தொடுத்துப்
பிரம வலவனொடு மறைமா
விருப்பிற் செலுத்து நிலத்தேர்மே
னின்று தெவ்வூர் வெந்தவிய
அருப்புக் குறுவெண் ணகை முகிழ்த்த
அந்த ணாளன் றிருவுருவம்'' [145]

மேருமலையாகிய வில்லில், வாசுகி என்னும் பாம்பினை நாணாகப் பூட்டியும், திருமாலை அம்பாகவும், காற்றினை அதன் இறகாகவும், அக்கினியை படையாகத் தொடுத்தும், பிரமனை சாரதியாகவும், நான்கு மறைகளையும் நான்கு குதிரைகளாகவும் கொண்டு செலுத்துகின்ற நிலமாகிய (பூமி) தேரில், நின்று, மூன்று புரங்களும் தன் அழகிய புன்முறுவலால் வெந்து சாம்பலாகுமாறு நின்றருளும் அந்தணனாகிய இறைவனது திருவுருவம்.

என மூ வெயிலெரித்தோன் திருவுருவத்தை போற்றுகிறார்.

16 கங்காதரர் (கங்கை தங்கு சடையர்)

பகீரதன் தன் மூதாதையர் நற்கதியடையும் பொருட்டு, வான்கங்கையை பல்லாண்டுகள் தவமியற்றி பூமிக்கு கொணர்ந்தான் என்றும், அக்கங்கை விண்ணுலகத்திலிருந்து பூமிக்கு அளவு கடந்த வெள்ளப்பெருக்குடன் விண்ணுலகிலும், மண்ணுலகிலும் பரந்தோடி, உயிர்களுக்கு பெருஞ்சேதம் விளைவிக்கும் என அஞ்சிய தேவர்களும் மற்றவரும் வேண்ட இறைவன் அதன்

---

144. திருவாசகம், திருவுந்தியார், பாடல், எண்:2.
145. சிவநெறிச் செய்யுட்றிரட்டு - பாடல் எண் : 622 - பக் 120.

செருக்கடக்கி தம் சடாமுடியில் அடக்கி தேவர்களையும் பூமியி-லுள்ள உயிர்களையும் காத்து அருள்புரிந்தார் என்றும், அக் கங்கையை உலக உயிர்களுக்கு தேவையான அளவு பூமிக்கு அனுப்பிவைத்தார் என்றும் இதனால் பகீரதனின் முதாதையர் நற்கதியடைந்தனர் என்றும் புராணங்கள் எடுத்துக்கூறும். பக்தி இலக்கியங்கள் இறைவனார் தம் சடாமுடியில் கங்கையைத் தாங்கிய வரலாற்றை பரந்து பேசும், அப்பர் பெருமான் இவ்-வரலாற்றை .........

> "அஞ்சையு மடக்கி யாற்ற லுடையனா யனேக காலம்
> வஞ்சமில் தவத்து ளின்று மன்னிய பகீரதற்கு
> வெஞ்சின முகங்க ளாகி விசை யொடு பாயுங்கங்கை
> செஞ்சடை ஏற்றார் சேறைச் செந்நெறிச்
> செல்வனாரே"[146]

ஐம்புலன்களையும் அடக்கிய ஆற்றலுடையவனாய், பலகாலம்
டொய்த்தல் இல்லாத அரிய தவமியற்றிய பகீரதனின் பொருட்டு, விண்ணினின்றும், ஆர்ப்பரித்து கொடுஞ் சினங் கொண்டு பாய்ந்து வருகின்ற கங்கையை தனது அழகிய செம்மைநிறம் பொருந்திய சடாமுடியில் தாங்கிய பெருமான் திருச் சேறை எனும் திருத்—தலத்தில் எழுந்தருளியுள்ள செல்வனாகிய சிவபெருமான் எனப் போற்றி பரவுவார்.

இதனை அப்பர்

> "நீர் பரந்த நிமிர்புன் சடையின் மேல்,,[147]

> "சேர்ந்தோடு மணிக்கங்கை சூடினானை"
> "விண்ணப்பம் உண்டது கேட்டருளீர்
> கங்கை சடையுட் கரந்தாய் அக்கள்ளத்தை மெள்ள
> உமை நங்கை அறியிற் பொல்லாது கண்டாய்
> எங்கள் நாயகனே,,[148]

---

146. அப்பர் தேவாரம்,திருச் சேறை, பாடல் எண்;4
147. அப்பர் தேவாரம், திருமணஞ்சேரி, பாடல் எண்: 6
148. ,, ,, திருச் சேறை பாடல் எண்:4

என்று, 'கங்கையை சடையில் மறைத்து வைத்ததை உமையம்மை அறிந்தால் தீங்கு விளையும் காண் எங்கள் இறைவனே' என்று இறைவனுக்கு எச்சரிக்கை விடுக்கின்றார். மற்றும்

> ''நீத்திரளை நீள்சடைமேல் நிறைவித் தானை
> நிலமருவி நீரோடக் கண்டான் தன்னை''[149]

என நீண்ட தம் சடாமுடியில் அருவியாகிய கங்கையைத் தாங்கியதைப் பாடுவார்.

சுந்தரர்:

> ''சடைக்கட் கங்கையைத் தாழவைத் தானை,,[150]
> ''ஆறுதாங்கிய சடையரோ சொல்லும்
> ஆரணிய விடங்கரே,'[151]

என்றும்

கங்கை சூடிய இறைவனது தகைமையைக் காட்டுவார்.

காரைக்காலம்மையார்;

> 'பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியும்
> தாம் பயின்று தாள் அருவி தூங்குதலால்,,[152]

கங்கையை அடக்கியாண்டு, தம் சடாமுடியில் தாங்கி மறைத்த செய்தியினை, தாள் அருவி தூங்குவதாகக் குறிப்பிடுவர்.

பட்டினத்தடிகள்

> ''சடைமேல் ஒருத்தி சமைந்திருப்ப மேனிப்
> புடைமேல் ஒருத்தி பொலிய
> சங்கே கலையே மருதற்குத் தான் கொடுப்பது
> எங்கே இருக்க இவள்[153]

என்பதால் மருதப்பிரான் வீதியில் திருவுலா வருதலைத் தரிசித்த ஒரு பெண் தான் அணிந்துள்ள, சங்கு வளையல்களும், ஆடையும், இழந்து வருந்த, அதனைக் கண்ட தோழி கூறும் கூற்றாக அமைகிறது இப்பாடல்

153. திருவிடை மருதூர் மும்மணிக் கோவை பாடல் எண் :57

மணிவாசகப் பெருமான்

"மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி சலமுகத்தால் அவன் சடையிற் பாயுமது என்னேடீ சலமுகத்தால் அவன் சடையிற் பாய்த்திலனேல் தரணியெல்லாம் பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ"[154] எனக் கங்கையின் பெருக்கத்தையும், இறைவன் சடையில் அடக்கி ஆண்டதும் அவ்வாறு அவன் சடையில் தாங்கியிராவிடில், உலகமனைத்தும் ஊழிக் காலத்து வெள்ளம் பாய்ந்தாற்போல், பாய்ந்து பெருங் கேடு விளைவித்திருக்கும் எனக்காட்டுவார்.

இனிக் காஞ்சிப்புராணம் காட்டும் கங்காதரமூர்த்தியின் வடிவினைக் காண்போம் :

"விசும்பினின்றும் வெகுண் டார்த்து
முழங்கிக் கொதித்து வீழ்தந்த
அசும்பு திரைநீர் வான் யாற்றை
யங்கோர் வேனி மயிர் நுதியிற்
பசும் புலறுகிற் பனியுறை போற்
றாங்கி வைகிப் பாவவினை
இசும்பு கடக்கும் பகீரதனின்
திரப்ப மகிழ்வான் திருவுறுவம்"[155]

விண்ணின்று மிகுந்த சினத்துடன் ஆரவாரித்து, பேரிரைச் சலுடன், முழக்கமிட்டு கொதித்து பெருக் கெடுத்து விழுகின்ற மிகுந்த நீர் பொலிவுமிக்க கங்கையை, இறைவன் தம் சடா முடியின் பசும்புல் நுனியில் பனி நீர் போல், ஒரு சிறுமயிர் முனையில் தாங்கினன் இறைவன். தனது பாவவினையைக் கடக்க விரும்பும் பகீரதன் அருகே நின்று வேண்ட மகிழ்ந்திருக்கும் இறைவனது திருவுருவம் என்பதாம்.

17. ஆபத் சகாயர் (இடர் நீக்கி உதவும் இறைவன்)

இடர் நீக்கி உதவும் இறைவனின் திருவுருவைக் காஞ்சிப் புராணம்.

154. திருவாசகம், திருச்சாழல், பாடல் எண் : 7
155. சிவநெறி செய்யுத்திரட்டு — பாடல் எண் 623 - பக் 120.

'கணங்கள் கலுழி மதக்கடவுள்
　　கதிர்வேற் குரிசி லெழு மாதர்
நிலங்கெ டிகிரிப் படையேந்தல்
　　நிலவெண் டோட்டு மலர்ப்புத்தேள்
அணங்கு நலவக்கோள் முனிவரர் சூழ்ந்
　　தணுக்க ராகப் பொலந்தவிசின்
இணங்கு மாவற் சகாய னெனும்
　　இறைமைப் பெருமான் றிருவுருவம்''[156]

வெள்ளம் போன்ற பூதகணங்கள் சூழ்ந்திருக்கவும் ஆனைமுகக் கடவுளும், ஒளி பொருந்திய வேலைத் தாங்கிய முருகப் பெருமானும், எழுவகையான மாதர்களும் பகைவரை அழிப்பதால் ஏற்படும் புலால் நாறும் சக்கரப்படையுடைய திருமாலும், நிலவினைப் போல் ஒளி பொருந்திய வெண்டாமரை மலரில் வீற்றிருந்து அருளும் கலைமகளும், ஒன்பது கோள்களும் தமக்கு மிக அருகில் நின்றுபோற்றி வணங்கும் முனிவர்களும் சூழ அழகிய பொன்னாளாகிய பீடத்தில் இருந்து அருள்புரியும் இறைவனாகிய ஆபத் சகாயர் என்னும் பெருமானின் திருவுருவம் என்பதாம்.

18. சோதிலிங்கேஸ்வரர் (அயனும் அரியும் தொழும் அனற் கடவுள்)

பிரம்மனும், திருமாலும், தங்களுக்குள் செருக்குற்று தாங்களே வல்லமை மிக்கவர்கள் என வாதிட்டனர். அவர்களுக்கு முன் இறைவன் விண்ணும்,மண்ணும் காணாதவாறு ஒரு பெருஞ் சோதிவடிவினனாகித் தோன்றி யருளினான்.''ஏ பிரம விஷ்ணுவே உங்களில்யார் எனது முடியும், திருவடியும் கண்டுவருகிறீர்களோ, அவரே உங்களில் வென்றவராவார்'' என அசரீரியாக இறைவன் குரல் எழுப்ப, பிரமன் அன்னப்பறவையாக உருக் கொண்டு விண்ணில் பறந்து முடியைக் காணவும், திருமால் பன்றி உருக் கொண்டு திருவடியைக் காணமுற்பட்டனர்,. பிரமன் விண்ணில் பல தேவ உலகங்களையும் கடந்து

156, சிவநெறிச் செய்யுட் திரட்டு — பாடல் எண் : 624—பக்—121

மென்மேலும் சென்று திருமுடியைக் காணாது மிக வருந்தி இளைத்து, செல்கையில் இறைவன் திருமுடியிலிருந்து கீழே வீழ்ந்த தாழம்பூவினை கண்டு, தான் திருமுடியைக் கண்டதாக பொய்சாட்சி கூறும்படி வேண்ட, அதுவும் அவ்வாறே இறைவனிடம் சாட்சி சொல்லவும், 'பொய் சாட்சி கூறினமையால் இனி நீ எமக்கும், எம் பூஜா காரியங்களுக்கும்பயன்படாது ஒழிக' எனச் சாபமிட்டார் இறைவன்.

பன்றி உருக் கொண்டுபாதாளத்தைத் துளைத்துச் சென்ற திருமால், இறைவன் திருவடியினைக் காணாது மீண்டார். தனது தோல்வியையும் ஒப்புக் கொண்டார். இவர்கள் முன் இறைவன் தன் வடிவைச் சுருக்கி சோதிலிங்க வடிவினனாகக் காட்சி தந்து பிரமன் பொய் சாட்சி கூறினமையால், பூஉலகில் எங்கும் உனக்கு வழிபாடு இல்லாமல் போகட்டும்'' என சாபமிட்டார்.

திருமால் உண்மை கூறினமையால் ''எம்மைப்போலவே உனக்கும், ஆலயங்களும் வழிபாடுகளும் நடக்கக் கடவன'' என அன்புடன் மொழிந்தருளினார்.

இருவரும் தாமே கடவுளர் என்னும் செருக்கை விடுத்து சிவபெருமானை பலவாறு போற்றித்துதித்து வழிபட்டு தத்தமது உலகங்களுக்குத் திரும்பிச் சென்றனர் என்பது இச் சோதிலிங்க மூர்த்தியின் வரலாறாகும். இவ்வரலாற்றினைப் பாடாத பக்தி இலக்கியங்களே இல்லை எனலாம்.

இவ்வரலாற்றினை அப்பர் பெருமான் தம் தேவாரத் திருப்பதிகத்தில்

''தேடியமால் பிரமனோடு
நீரேறும் பிரலயங் கொள்ள
அடியொடு முடியும் காணார்''[157] என்றும்
''தண்தா மரையானும் மாலுந் தேடத்
தழற் பிழம்பாய் நீண்ட கழலான் கண்டாய்''[158]

157. அப்பர் தேவாரம், திருக்குறுக்கை வீரட்டம், பாடல் எண் :1
158. ,, திரு இன்னம்பர் ,, :10

''மாலொ டும்மறை யோதிய நான்முகன்
காலொ டும்முடி காண்பரிதாயினான்''[159] எனவும்

''பாம்ப ணைப் பள்ளி கொண்ட பரமனும்
பூம்ப ணைப் பொலி கின்ற புராணனும்
தாம்ப ணிந்தளப் பொண்ணாத் தனித்தழல்
நாம்ப ணிந்தடி போற்றுநள் ளாறனே''[160]

ஆதிசேடனை படுக்கையாகக் கொண்ட திருமாலும், தாமரை மலரினை இருப்பிடமாகக் கொண்ட பிரமனும் காணமுடியாத தழல் வடிவினனாகி, நின்ற பெருமானை நாம்பணிந்து அடி போற்றுவோம். அவன் திரு நள்ளாறு எனும் தலத்தில் உறை-பவன் என்பார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் :

''கரியவன் நான்முகனும்
அடியும் முடியும் காண்பரிய
பரியவன் பாசுபதன்''[161]

கரிய நிறங்கொண்ட திருமாலும், நான்முகனும், காண்பதற்கு அரியனாகி, ஒளிப் பிழம்பாய் நின்றருளிய பெருமான், பாசுபதம் எனும் அம்பினைத் தாங்கியவன் எனப் போற்றுவார்.

''மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும் மாமலர்மேல்
அண்ணலும் நண்ணரிய ஆதியை''[162]

மண்ணினை உண்டு அன்று தன் தாயாகிய யசோதைக்குத்தன் வாயினில் உலகைக் காட்டிய மாயனாகிய திருமாலும், செந்-தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் நான்முகனும் காண்பதற்கு அரிய பெருமான் என்பார்.

159. அப்பர் தேவாரம், திரு நெய்தானம் ,, :9
160. ,, திருநள்ளாறு பாடல் எண். 9
161. சுந்தரர் தேவாரம் - திருப்பழமண்ணிப்படிக்கரை பதிகம் பாடல் எண் :8
162. ,, திருவாரூர் ,, :9

மணிவாசகப் பெருமான்:

"ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே"[163]

என இறைவன் ஓங்கியும், ஆழ்ந்தும் விளக்குகின்ற தன்மையைக் காட்டுவார்.

"அரியொடு பிரமற்கு அளவுஅறி ஒண்ணான்" [164]

எனவும்

"திருநெடுமால் அன்று
அடிமுடி அறியும் ஆதரவு அதனில்
கடுமுரண் ஏனம் ஆகி முன் கலந்து
ஏழ்தலம் உருவ இடந்து பின் எய்த்தும்
ஊழிமுதல்வ ! சய சய என்று
வழுத்தியும் காணா மலரடி இணைகள்" என்றும்[165]

மூவுலகு அளந்த நெடுமால் முன் இறைவன் சோதிப் பிழம்பாய் நின்றருளுகையில், பிரமன் முடியினைக் காணவும், திருமால் திருவடியினைக் காண வெள்ளைப் பன்றியின் உருக் கொண்டு ஏழு உலகங்களிலும் தன் கொம்புகளால் தோண்டியும் திருவடி காண இயலாமல் ஊழி முதல்வன் நீயே ! போற்றி ! போற்றி ! என வாழ்த்தியும் காணமுடியாதது இறைவனது மலர்போன்ற திருவடிகள் என்பதால், நெடுமால் அகந்தை யொழித்து நற்பேறு பெற்றதைக் காட்டுவார்.

".அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றதுதான் என்னேடீ
நிலமுதற்கீழ் அண்டமுடி நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ" [166]

என இறைவன் அழல் வடிவினனாய் அண்டமுட்ட நிற்றிராவிடில் பிரம்ம விட்டுணுவின், தான் எனும் ஆங்காரம் ஒழிந்திருக்காது என்கிறார்.

---

163. திருவாசகம், சிவபுராணம், பாடல் வரி எண் : 35
164. ,, கீர்த்தி திரு அகவல் ,, 35
165. திருவாசகம் போற்றித்திரு அகவல் 4-10
166. திருவாசகம் திருச்சாழல் பாடல் எண் : 6.

சேரமான் பெருமான் நாயனார் :

''திருமாலும் நான்முகனுந் தேர்ந்துணரா தன்றன்
அருமால் உறவழலாய் நின்ற - பெருமான்'' [166-ஆ]

சோதிப் பெரும் பொருளாய் நின்ற பெருமானை திருமாலும், நான்முகனும் தேடியும் அறிய வொன்னாது மயங்கி நின்ற நிலையினைக் காட்டுவார்.

நக்கீரதேவ நாயனார்

''அடியும் முடியும் அரியும் அயனும்
படியும் விரும்பும் பாய்ந்தேறி — தொடியுங்கால்
இன்னதென வறியா ஈங்கோயே ஓங்காரம்
அன்ன தென நின்றான் மலை''. [166-இ]

இறைவன், திருவடியை அரியும், திருமுடியை பிரம்மனும் நில உலகத்தைத் தோண்டியும், விண்ணில் பறந்து சென்றும், கூறு மிடத்து இன்ன தன்மை என்று அறிய வொட்டாமல் ஓங்காரப் பொருளாய் நின்றருளிய பெருமானது மலை ஈங்கோய் மலை என்பதாகும்.

மணிவாசகப் பெருமான் :

''வாஇங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு
நான்முகன் தேடி
ஓவியர் உன்னி நிற்ப ஒணதழல்
விணபிளந் தோங்கி
மேவிஅன் றண்டம் கடந்து விரிசுட
ராய் நின்ற மெய்யன்
தாவி வரும்பரிப் பாகன் தாழ்சடை
யோன் வரக் கூவாய்'' [167]

இறைவன் சோதிலிங்கமூர்த்தியாய் அண்டங்கள் பல கடந்த நின்றவன், உண்மைப் பொருளானவன், குதிரைச் சேவகனாய்

166-ஆ. பதினொராம் திருமுறை - திருக்கைலாய ஞான உலா - பாடல் வரி 1

166-இ. பதினொராம் திருமுறை - திரு ஈங்கோய் மலை எழுவது பாடல் எண்:1

167. திருவாசகம், குயிற்பத்து, பாடல் எண் :8

தோன்றி வழிநடத்திச் சென்றவன், நீண்ட சடாமுடியையுடைய வனாகிய பெருமான் வரக் கூவுவாய். என அரியும் அயனும் தொழுகின்ற ஒளிக்கடவுளைக் காட்டுவார்.

திருஞானசம்பந்தப் பெருமான் :

"ஆகம்வைத்த பெருமான் பிரமனோடு மாலுந் தொழுதேத்
ஏகம்வைத்த வெரி ய்யா மிக வோங்கிய வெம்மான்"[168]

பிரமனும், திருமாலும், தொழுதுவணங்கும், ஒளிப்பிளம்பாய் ஓங்கி வளர்ந்த பெருமான் எனப் போற்றுவார்.

பட்டினத்தார் :

வலம்புரி நெடுமால் ஏனமாகி நிலம்புக்கு"[169]

என்பதால் இறைவனது வலத்திருவடி திருமால் அறிதற்கு அரியதாக விளங்கும் என்பார்.

இனி காஞ்சிப் புராணம் காட்டும் சோதிலிங்கேஸ் வரரைக் காணலாம்.

"கடைக்கால் வெள்ளப் பெரும்புணரி
நாப்பட் கதிர்த்த சுடரிலிங்கத்
திடைப்பான் மதிய முடிவயங்கத்
தோன்றி விசும்பி என்கினமுங்கீழ்த்
தொடைப் பூந் துளபச் சூகரமுந்
துலங்க முடிமேற் கரங்குவித்துப்
படைப்பான் முகுந்தன் வலமிடமும்
பரவத் திகழ்வோன் திருவுருவம்"[170]

பிரளய காலத்து ஊழிக்காற்றால், பெரும் வெள்ளப் பெருக்கெடுத்து பரிகாசத்துடன் வெளிப்படுகின்ற பிரகாசமிக்க இலிங்கத்தின் முடியில் பிறை நிலாவைச் சூடியும், பிரமன் இறைவனது முடியைக் காண ஆகாயத்தை நோக்கி அன்னப்பறவையாகச் செல்லவும், கீழ்த்திருவடியை துளாய் மாலை திருமால் பன்றி

---

168, திருஞானசம்பந்தர் தேவாரம், திருப்புகலூர் பதிகம் பாடல் எண்

169. பட்டினத்தார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை வரி

170. சிவநெறிச் செய்யுள் திரட்டு—பாடல் எண் : 625 - பக் 121.

உருக் கொண்டு தேடவும், கொண்ட சோதிலிங்கேஸ்வரரின் வலப்பாகத்தில் சிரமேற்கரங்குவித்து நின்று பிரமன் தொழவும், இடப்பக் சிரமேற்கரங்குவித்து நின்று திருமால் தொழவும் திகழு-கின்ற சோதிலிங்கேஸ்வரரின் திருவுருவம் என்பதாம்.

19. மச்சம்ஹாரர் (மீன் கண் பறித்த வெய்யோன்)

> ''வானம் பழிக்க வலைமாக்கள்
> வடிவு தாங்கி வலம்புரிக்கை
> மீனம் படுத்து விழி மூன்று
> விரன்மோ திரத்தி னெவ்வுயிர்க்கும்
> ஞானம் பயப்பக் குருவிந்த
> நலங்கேழ் மணிபோற் பதித்தணிந்த
> கானம் படித்துக் சுரும்புளருங்
> கடுக்கைக் தொடையோன் றிருவுருவம்''[171]

மழை பொய்த்தலால் விளை நிலங்களற்ற கடற்கரைப் பகுதியில் மீன் பிடித்து வாழும் மீனவர்களின் வடிவு தாங்கி வலம் புரி சங்கு போன்ற தமது கரத்தால் செருக்குற்று கடலில் உலவித் திரியும் திருமாலின் அவதாரமான மீனினை விரைந்து பற்றிக் கொணர்ந்து, உல உயிர்கட்கெல்லாம் ஞானம் அளிக்கத்தக்க குருவாகிய இறைவன் தனது அழகிய கை விரலில் அணிந்திருக்கும் மோதிரத்தில் அம்மீனின் கண்ணைப் பறித்து மணிபோல் பதித்தணிந்து வண்டுகள் தேன் உண்டு இளிய பாடல் போல் ரீங்காரம் செய்வதால் மலர்கின்ற கொன்றை மாலையை அணிந்து வீற்றிருக்கும் இறைவனாகிய மீன் கண் பறித்த பெரு-மானின் திருவுருவம்.

20. கூர்ம சம்ஹாரர் (ஆமை ஓடணிந்த ஆண்டவன்)

தேவர்களும், அசுரர்களும், பாற்கடல் கடைந்த காலத்தில், மந்தரை மலையை மத்தாகவும், வாசுசி என்னும் பாம்பினை கடை கயிறாகவும், கொண்டு கடைகின்ற காலத்தில், மத்தான மந்தர மலை தனது நிலை தளர்ந்து அலைக்கழிக்கப்படவே திருமால் இதனை சீர் செய்ய ஒரு ஆமை வடிவு தாங்கி மலை-யின் அடிப்பாகத்தை தாங்கினார் என்றும் பின்னர் மந்தரமலை ஒரு நிலைப்பட்டு நின்றதும், அதனால் பாற்கடல் கடைந்து

---

171. சிவநெறிச் செய்யுட்றிரட்டு—பாடல் எண்:626—பக்கம்121

அமுதம் உண்டனர் என்பது வரலாறாகும். இவ்வாறு தான், ஆமை வடிவு கொண்டு மந்தர மலையைத் தாங்கியதால் தான் தேவர்களுக்கு அமுதம் கிடைத்திடபாற்கடலை கடைய முடிந்தது என்னும் செருக்குடன் கடலில் திரிந்த ஆமையை அதன் செருக்கடக்கி, அதன் ஒட்டினை தனது தலைமாலைக்கு நடு நாயகமாக சிவ பெருமான் கோத்தணிந்தான் என்பது வரலாறாகும்.

இறைவன் ஆமையோடணிந்து விளங்குதலை. தம் தேவாரப்பதிகத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகள்

''ஏனமருப்பி னொடும் எழில்
ஆமையும் பூண்டுகந்து''[172]

பன்றிக் கொம்பும், எழில் மிகுந்த ஆமையோடும் விரும்பி அணிந்து விளங்கும் பெருமான். இங்கே ஆமை எனக் குறிப்பிட்டது ஆமை ஓடாகும் என்பதாம்.

''மத்தயானை உரிபோர்த்து
மருப்பும் ஆமைத் தாலியார்''என்னும்

பதிகத்தில் இறைவன் யானைத் தோலை உரித்து போர்வையாகப் போர்த்தும் ஆமையோட்டினை தாலியாக மார்பில் அணிபவர் என எடுத்துக்காட்டுவர் மற்றும்

''பூண்பதோர் இள ஆமை பொருவிடை யொன்றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாருங்க ாண''[174]
மற்றும்

''அக்கும் ஆமையும், பூண்டிரோ சொலும்
ஆரணிய விடங்கரே''[175]

என ஆமையோடனிந்து போர் செய்யவல்ல விடையின் மீதமர்ந்து பொல்லாத வேடம் என்றமையால், தலைமாலையும், எலும்பு மாலையும் அணிந்து விளங்குதலை உணர்த்துவார்.

172. சுந்தரர் தேவாரம் திருநனிபள்ளிப்பதிகம், பாடல் எண்:9
173. ,, திருக்கடவூர் மயானம், பாடல் எண் :6
174. ,, திருநாகைக்காரோணம், பாடல் எண் :8
175. ,, திருப்பைஞ்ஞீலி பாடல் எண் ; 9

இனி காஞ்சிப்புராணம் காட்டும் ஆமையோடணிந்த ஆண்டவனைக் காணலாம்.

> "மகரந் திளைக்குங் கடலேழு
> மலங்கக் கலக்கும் பசுந்துளவ
> முகைவிண் டவர்தா ராமைதனைப்
> பற்றித் தகர்த்த முதுகோடு
> நகுவெண் டலைமா லிகையணிக்கு
> நடுநா யகமாக் கோத்தணிந்து
> புகரின் றுயர்ந்தோர் தொழப் பொலிந்த
> புத்தேள் செல்வத் திருவுருவம்"[176]—அ

விலாங்கு, சுறா, மீன்கள் திளைத்து களித்துக் கலக்குவதால் செந்நிறமாகத் தோன்றும் ஏழுகடல்களும். அவற்றில் பசுமையான துழாய் மாலைதனை அணிந்த திருமாலாகிய ஆமையைப் பற்றி அதன் செருக்கடக்கித் தகர்த்து அப்பழமை வாய்ந்த ஆமையோட்டினை தமது தலையோடு அணிந்த மாலையாகிய அணிகலனுக்கு நடுநாயகமாக கோத்தணிந்து விளங்கும் குற்றமற்ற உயர்ந்தோனாகிய தேவர், முனிவர், ஏனைய தெய்வங்கள் போற்றித் துதித்துவணங்கும்இறைவனின் செல்வத் திருவுருவம்.

எனச் சிவபெருமான் ஆமை ஒடு அணிந்த வரலாற்றைக் கூறுகிறது.

## 21. வராக சம்உறாரர் (பன்றிக் கொம்பணிந்த பரமன்)

திருமால், முன்னொரு காலத்தில் இரண்யாட்சன் (இரனியனின் சகோதரன்) என்னும் அசுரன், பூமியாகிய உலகை பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலுக்கடியில் மறைத்துவைத்தான் என்றும், தேவர்கள் வேண்டிக் கொள்ள பன்றி (வராகம்) உருக் கொண்டு இரனியாட்சனை வதைத்து, நில உலகத்தை திருமால் வெளிக் கொணர்ந்தார் என்பது வரலாறாகும்.

அவ்வாறு பூமியை நிலை நிறுத்தியதால் ஏற்பட்ட செருக்குடன், கடல்கள் ஏழும் வற்றும்படியாகவும், மலைகள் பொடிபடவும் அறைபறக்கும் விழிகளையுடையதாகி, உயிர்வர்க்கத்தை அலைக்கழித்து திரிந்து-அத்திருமாலாகிய கடவுட் பன்றியினை

---

176. ஆ. சிவநெறிச் செய்யுட்திரட்டு பாடல் எண் 627—பக்121.

சிவபெருமான், வேடன் உருக் கொண்டு அழித்து அப்பன்றியினது கொம்பினை பறித்து அணிகலனாக அணிந்து கொண்டார் என்பது வரலாறாகும்.

இவ்வரலாற்றினைப் பக்தி இலக்கியங்கள் பரவிப் பேசு-கின்றன. இவ்வரலாற்றினை அப்பர் பெருமான்:

''எரியதொரு கைதரித்த இறைவர் போலும்
ஏனத்தின் கூடுனயிறு பூண்டார் போலும்''[176] என்றும்

வெள்ளைப் பன்றியின் ஒருகோடுபறித்து, மற்றொருகொம்பினைப் பறிக்காமல் அதன் வழிபாட்டுக்கு இரங்கி விடுத்தார் எனும் செய்-தியை அப்பர் பெருமான்

''பேரவன் காண் பிறையெயிற்று வெள்ளைப் பன்றிப்
பிரியாது பல நாளும் வழிபட் டேத்தும்
சீரவன்காண் சீருடைய தேவர்க் கெல்லாம்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே''[177]

பிறைபோன்ற வளைந்த கொம்பினையுடைய வெண்மைநிற முடைய பன்றியாகிய திருமால் வழிபட்டு போற்றி வணங்கும் இறைவன்

''ஏனத்தின மருப்புப் பூண்டார் போலும்
இமையவர் கனேத்த இருந்தார் போலும்''[178]

பன்றியின் இளமை பொருந்திய கொம்பினைஅணிந்தவர் போலும் விண்ணவர்கள் போற்றி வழிபடும் இறைவர் போலும் என்பார்.

''கொம்பினார் குழைத்த ஏனற் கோமகன் கோல நீர்மை
நம்பினார் காணலாகா வகையதோர் நடலை செய்தார்''
என்றும்[179]

நடலை செய்தார் என்பதால், இறைவன், பன்றி உருக் கொண்ட திருமாலின் செருக்கடக்கி, அதற்கு துன்பம்

---

176. அப்பர் தேவாரம், திருவிழிமிழலை திருத்தாண்டகம், பாடல் எண்: 10
177. ,, திருச்சிவபுரம் திருத்தாண்டகம், பாடல் எண்:6
178. ,, திருவாரூர், ,, ,, 5
179. ,, திருவதிகைவீரட்டானம், திருநேரிசை ,, 3

விளைவித்து, அதன் ஒரு கொம்பினை ஒடித்து தம்மார்பில் சூடியதைப் பாடுவார்.

நடலை — துன்பம்

இவ்வரலாற்றினைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ;

''ஏனக் கொம் பும்மிள ஆமையும்,
பூண்டங்கோர் ஏறும் ஏறிக்''[180]

பன்றியின் கொம்பும், இளமைவாய்ந்த ஆமையோடும் அணிந்து விளங்கி, விடையேறிவரும் இறைவனைக் காட்டுவார்.

''ஏன மருப்பி னொடும் எழில்
ஆமையும் பூண்டுகந்து''[181]

இதனால் பன்றியின் கொம்பும், ஆமை ஓடும் பூண்டதைக் காட்டுவார்.

''கொள்ளி வாயின கூரெயிற்றேனம் கிழிக்கவே
தெள்ளி மாமணி தீவிழிக்கும் இடஞ் செந்தறை''[182]

திருப்புனவாயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமான் பன்றிக் கொம்பணிந்ததைக் காட்டுவார்.

''மைம்மான மணி நீல கண்டத் தெம் பெருமான்
வல்ஏனக் கொம்பணிந்த மாதவனை வானோர்
தம்மரனைத் தலைமகனைத் தண்மதியும் பாம்பும்
தடுமாறுஞ் சடையானைத்.........''[183]

இச் செய்தியினைக் காரைக்காலம்மையார்

''திருமார்பில் ஏனச் செழு மருப்பைப் பார்க்கும்
பெருமான் பிறைக் கொழுந்தை நோக்கும் — ஒரு நாள்
இது மதியென் றொன்றாக இன்றளவுந்தேரா
தது மதியொன் றில்லா அரா''[184]

---

180. சுந்தரர் தேவாரம், முப்பதும் இல்லை, பாடல் எண் : 4
181. ,, திருநனிப்பள்ளி, பாடல் எண் : 6
182. ,, திருப்புனவாயில், பாடல் எண் : 8
183. ,, திருவதிகை வீரட்டானம் 6
184. காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதி, பாடல் 48

பெருமான், பன்றியின் வளைந்த கொம்பையும், பிறைநிலா வையும், எது நிலா, எது வளைந்த கொம்பு என ஐயப்படுவதாக காட்டுவது மிகவும் நகையூட்டுவதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

பட்டினத்தடிகளும் இதனை,

"......... . . . . . ஒருபால் திருவிடை
செங்கண் அரவும் பைங்கண் ஆமையும்
கேழற் கோடும் விழ்திரள் அக்கும்
நுடங்கு நூலும் இடங்கொண்டு புனைந்து"[185]

என ஆமையோடும் பன்றிக் கொம்பும், எலும்பு மாலையும் அணிந்து விளங்கும் இறைவனைப் பாடுவார்.

இனி காஞ்சிப்புராணம் காட்டும் பன்றிக் கொம்பணிந்த பண்ணவனைக் காணலாம்.

"சுழிக்கும் புனலேழ் கடல் சுவற்றி
மலைக ளேழுந் துகள்படத்தீ
விழிக்குங் கடவுட் பன்றியினை
விறல்வே டுருக் கொண் டெழுந்தருளி
அழித்தங் கொருவெண் கோடுபறித்
தணிந்து மற்றை இடக்கோடு
பழிச்சுந் துதிகேட் டுளமிரங்கி
விடுத்த பகவன் திருவுருவம்"[186] — அ

ஊழிக்காலத்து சுழிபோல் வளைந்து அழிக்க வல்லதான, நீர் மிகுந்த கடல்கள் ஏழும் முற்றும் அழித்தும், மலைகள் ஏழும் துகள்படவும், தீ போல் விழித்து கோபக்கனல் தெறிக்கவரும் திருமாலயாகிய பன்றியினை, பெருமான் வெல்லுதற்கரியவேடர் உருவம் கொண்டு எழுந்தருளிச் செய்து அவ்வலிமைமிக்க பன்றியின் செருக்கடக்கி அழித்து ஒரு கொம்பினை பறித்து தமது மார்பில் அணிந்தும், மற்றைய இடக் கொம்பு பறிக்கையில் அப்பன்றி தம்மை வணங்கித் துதித்து போற்றிடவும் தம் திரு

---

185 திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, பாடல் வரி: 23 முதல் 26

186 — அ. சிவநெறிச் செய்யுட் திரட்டு — பாடல் எண்: 268 பக். 122

வுள்ளமிரங்கி அவ்விடக் கொம்பினைப் பறிக்காமல் விட்டுவிட்ட இறைவனாகிய சிவபெருமானின் திருவுருவம். எனப் பெருமான் வேடுவனாகி பன்றிக் கொம்பணிந்த பாங்கைக் காட்டுகிறார்.

22. நரசிம்ம சம்ஹாரர் (ஆளரியை அடர்த்த அம்மான்).

'சரபம்' என்பது எட்டுக் கால்களையுடைய பறவையினம் இது 'சிம்பிள்' எனவும் வழங்கப்பெறும்.

திருமால் எடுத்த நரசிம்மம், மனித உடலும், சிங்கத்தலை-யும் கொண்டது. அதனை அழிக்கச் சிவபெருமான் கொண்ட சரப உரு, பாதி மிருக உடலும், பாதி பறவை உடலும், மனித மார்பும், தோள்களும், நான்கு திருக்கரங்களும் சிம்மத்தலையும் கொண்டது. தத்துவம் நிரம்பப் பெற்ற இவ்வுருவத்திற்கே உரிய இடமாகத் தோன்றுவது 'திருபுவனம்' எனும் தலமாகும் இது தமிழகத்தே மாயூரத்தை அடுத்துள்ளது. இத்தலம் தருமை யாதீனத்து அருளாட்சிக்குட்பட்டது.

மெய்யடியார்கள், சோமசுந்தரக் கடவுளை போக, யோக, வேக, வடிவங்களில் வழிபடுவர். அவற்றுள் வேக வடிவமே 'சரப உருவம்' மக்களின் துன்பம் துடைத்து, இன்பத்தினை நல்க-வல்லது வேக வடிவம் என்பர் அறிஞர்.

சிவபெருமான் நரசிங்கத்தை அழிக்க வீரபத்திரரை அனுப்பி நரசிக்கத்திற்கு அறிவுரை கூறுமாறு ஏவினார். அவர் சொல்-கேளாத நரசிங்கத்தை அழிக்கக் கருதிய சிவபெருமான் தன் உடலில் ஒரு பாதி கொடி விலங்காகவும் மறுபாதி கொடிய பற-வையாகவும் உருக் கொண்டார். அயன் படைப்பிலேயே அடங்-காத மிருகப் பறவை உருவதோடு, எட்டுக் கல்களுடனும் கூரிய நகங்களுடனும் இரு இறக்கைகளுடனும். நீண்ட வாலுடனும், கூர்மையான பற்களுடனும், கூர்ந்து நீண்டு வளைந்த மூக்குட-னும், உருண்டு திரண்ட பெரிய கண்களுடனும், மான், மழு-வேந்திய கரங்கள் இரண்டும், அபய கரங்கள் இரண்டும், ஆக நான்கு கைகளுடன் பரந்து அகன்ற திண்ணிய மார்புடனும் விளங்கினார்.

இதனைச் சோண சைலமாலை :-

''சிம்புளாய் மடங்கல் எறும்வழி கவர்ந்த
திறலும் முப்புரஞ்சுடு விறலும்
அம்புயாதனத்தன் முடி களைந்திட்ட
அடலும் ஏத்தினர்க் கிடருளதோ !

என்று கூறும் நரசிம்மாவதாரத்தால் மூவுலகத்தவருக்கும் ஏற்பட்ட துன்பத்தை, நடுக்கத்தை, கம்பத்தைப் போக்கியதால் திருபுவனத் தெம் பெருமானுக் 'கம்பஹரேஸ்வரர்' என்றும் 'நடுக்கம் தவிர்த்த பெருமான்' என்றும் பெயர் உண்டாயிற்று. இப்பெருமானை வணங்கும் யாவருக்கும் எல்லாத் தீவினைகளும் தீர்ந்து நன்மை உண்டாகும் என்று 'சரபோப நிஷத்' கூறுகின்றது சரபஉரு மூர்த்தியினை, திருபுவனமேயன்றி திரு ஆனைக்கா, புதுக்கோட்டை முதலான இடங்களிலும், காணலாம்.

சரபபுராண வரலாறு

முன்னொரு காலத்தில் மூவுலகத்தினையும் துன்புறுத்தி வந்த இரணிய கசிபு எனும் அரக்கன், எல்லோரும் தன்னையே வணங்க வேண்டும் என்று கட்டளையிட எல்லோரும் 'இரண்யாய நம' என்று சொல்லி அவனையே வணங்கி வந்தனர்.

சிப்பி வயிற்றில் முத்து பிறப்பது போல பிரகலாதன் தோன்றி காக்கும் கடவுளாம் திருமாலை 'நாராயணாயநம' என்னும் ஆதிமூல மந்திரத்தினை உலகறியச்செய்தார். செருக்குற்ற இரணியகசிபு, அந்த நாராயணன் எங்குள்ளான் என்று கேட்கவே 'அவன் தூணிலும் இருப்பான்' துரும்பிலும் இருப்பான் என்று பதிலுரைத்தார், இந்தத்தூணில் காட்டுவையோ 'என இயம்பி தூணை உதைத்தான். திருமால் நரசிங்க உருக் கொண்டு அத்தூணில் தோன்றி, இரணியக் கசிபுவைக் கொன்று மூவுலகத்துள்ளோரையும் காப்பாற்றியதாக புராணங்கள் கூறும்.

அதன் பின்னர், நரசிங்கமூர்த்தி இரணியன் உடலைக் கிழித்து, அவன் குடலைப்பிடுங்கி, அவனது உதிரத்தைக் குடித்தமையால் மதிமயக்கமுற்று, தாம் செய்த செயற்கரிய செயலுக்காகச் செருக்குற்று, உலகத்தையே துன்புறுத்தி அழிக்கத் தொடங்கினார் தேவர்கள் அஞ்சி,சினம்தணிய நரசிம்ம மூர்த்தியை

வேண்டினார்கள். ஆனால் நரசிம்மமோ மேலும் வீறு கொண்டு உலகை அழிக்கத் தொடங்கியது.

தேவர்கள் கைலைநாதனை அடைந்துபணிந்துவணங்கினர். அவரும், வீரபத்திரரை அனுப்பி, நரசிம்மத்திற்கு அறிவுறை கூறு மாறு அனுப்பினார். அறிவுறையினைக் கேளாத மறமடங்கலை சரப உருக் கொண்டு தோன்றி அழித்துத் திருமாலை முன். போலவே, தோற்றுவித்து அருளினார் எனச் சரப புராணங்கூறும்

இச்சரபபுராணத்துள், காப்புச் செய்யுள், பதிகம் அன்றி 1) நரசிங்க உற்பத்திச் சருக்கம் 2) கடவுளர் முறையீட்டுச் சருக்கம், 3) வீரபத்திரர் எழுச்சிச் சருக்கம் 4) அறிவுறுத்திய சருக்கம், 5) சலந்தரன் வதைச் சருக்கம் 6) சக்கரம் பெறற்ற சருக்கம் 7) நரசிங்க வதைச் சருக்கம் ஆகிய ஏழு சருக்கங்கள் காணப்படுகின்றன.

சரபமூர்த்தியின் தோற்றத்தை சரபபுராணம்

''சடையணி முடியு மிளமதிக் கொழுந்து
மழல் விழி மூன்றும் வாளெயிருந்
தொடரயிற் பரவைத் துண்டமுங் காள
கண்டமுந் தோள்களா யிரமும்
படர் சிறைப் பாம்பும் நாபியுங் கீழழற்
படிவமும் வாலு நாற் றாளுந்
திடமுறு புறத்துப் பதமொரு நான்குஞ்
சேனிடைப் பொலிந்துமுன் றிகழ''[186-ஆ] எனவும்

''எயிறுகொண் டதர மதுக்கியார் வங்க
ளொழவுயிர்ப் போங்க வூங்காரப்
புயலொலி யுலைய மிகவன லொளிகள்
புக்கொளித் திடவொளி பொங்கச்
செயிரறு மருவா மிசனுக் குரிய
திருவுரு வருணமா யுதங்கள்
பயிறரப் பயிலா வேற்றுமை திகழப்
பரவுகுஞ் சரபமா யினனால்[186-இ]

எனப் போற்றும்

186-ஆ, 186-இ சரபவுராணம்-நரசிங்க வதைச் சருக்கம், பாடல் எண் : 7,8

அழகுறச் செஞ்சடை முடியில் பிறைச்சந்திரனும், நெருப்புப் போன்ற விழிகள் மூன்றும், வாள்போன்ற பற்களும், பறவை உடலும், நீலகண்டமும், தோள்கள் ஆயிரமும், பாம்பும் அனிந்து கழுத்தின் கீழ் ஆழல் போன்ற தோழ்றமும், நீண்டவாலும், நான்கு தோள்களும் திருவடிகள் எட்டும் கொண்டு நரசிம்மத்தின் முன் தோன்றி,

வளைந்த பற்களால் கீழ் உதடு அழுத்துமாறும், உயிப்பு அடங்குமாறு அலைபாயும் புயலொழியும் உயிர்வர்க்கங்கள் நடுங்கி அடங்குமாறு ஓங்காரப் பேரொலி செய்தும், சோதி வடிவாகித் திகழ்ந்து, இறைவனுக்கே உரிய பல்வகைப்பட்ட ஆயுதங்கள் கரங்களில் தாங்கி, மற்ற போர்க் கோலங்களினின்றும் வேற்றுமை விளங்கித் தெரியுமாறு கோலங்கொண்டு சரப உருவ மெடுத்துத் தோன்றினான் ஈசன் என அழகுற எடுத்து காட்டு-கிறது. நரசிம்மத்தை சரபமூர்த்தி பொருது வென்ற திறத்தைக் கீழ்வரும் பாடல்கள் அழகுற எடுத்துரைக்கின்றது.

''மறுகுறு வலிய தாள்கொடு மிதித்து
 வால்கொடு தாளினைப் பிணித்துச்
செறுநரவர்தன் கரங்களை விளங்குந்
 திருக்கரங் கொண்டுபின் காட்டிச்
சிறிதகல் மார்பை நாடியைக் கமலச்
 செங்கையாற் றுகிளாற் பிளந்து
குறுகரு முரகற் பற்றிவெங் கலுழல்
 கொதித்தெழ லெண்ணமீதெழுந்தான்'' 186-அ

பாரிடைப் போகட் டெடுத்துமீன் டிட்டுப்
 படருந் திசையெலா முருட்டிப்
பேரிட ரடையச் சிறகரா லடித்துப்
 பிதிர்ந்தெலும் புக்கிட மிதித்துக்
கூரட குகிரால் மார்பத்துதிரங்
 குதித்தெழ மிகப் பிளந் துடலி
னாருயிர் குறைந்து மானிட மடங்க
 லவச முற்றிட வடர்த்ததால்'' 186-உ

---

186-அ. சரபபுராணம் - நரசிங்கவுதைச் சருக்கம் - பாடல் எண்: 15
186-உ- மேலது ,, ,, பாடல் எண்: 16

எதிரிகள் அஞ்சுமாறு வளமைமிக்க திருவடியால் மிதித்தும், வாலினால் நரசிம்மத்தின் கால்களை சேர்த்துக் கட்டியும், போர் செய்ய வல்ல கைகளை தமது திருக்கரத்தால் இழுத்துப் பின்-னால் கட்டியும், அகன்ற மார்பினையும், கழுத்தினையும், தம் செம்மை நிறம் பொருந்திய கரத்திலுள்ள மழுவாயுதத்தால் பிளந்தும், கழுகானது ஒரு சிறு பறவையைப் பற்றி இழுத்து மாறு-படுவது போல சரபமூர்த்தி நரசிம்மத்தைப் பற்றி இழுத்து கொத்தித் தெழுந்தார்.

மேலும் சரபமூர்த்தி, ஆகாயத்தில் நரசிம்மத்தைத் தூக்கிச் சென்-றும், அங்கிருந்து கீழே வீசியும், திசைகள் அனைத்திலும் தூக்-கிச் சென்று உருட்டியும், மிகுந்த துன்பம் அடையுமாறு தம் சிறகால் அடித்துப் பிய்த்தெடுத்துத் துன்பம் விளைவித்தும் நரசிம் மம் அஞ்சிப் புகுந்த இடங்களிலெல்லாம் சென்று மிதித்தும். கூறிய நகங்களால் மார்பகத்தைக் கிழித்து, இரத்தம் பொங்கிப் பெருக்-கெடுத்து ஓடுமாறு செய்தும், அந்நரசிம்மத்தின் செருக்கினை அடக்கி அருளினான் பெருமான் என்பதாம்.

சரபமூர்த்தியை போற்றித் தொழுவார் வேண்டியவற்றை, நாம் விரும்பியவாறே அடைந்து இன்புறுவார்கள் என்பதை கீழ் வரும் பாடல் எடுத்துக் காட்டும் ;

> ''கூறு மானிட மடங்களில் வலியுகக் குறைந்த
> மாநிலா வருட் சரப நாயகன்றனை மகிழ்வா
> வாறு திங்களன் பெய்திய வறிவொடா தரித்தாற்
> பேறு வேண்டுவ வேண்டுவார் பெறுவது திண்ணம்''
> 186—ஊ

இதனை சுந்தரமூர்த்தி சுவாமிகள் ;

> ''சித்த தூசிமு டுதிர் தேவர்கணம்
> தொழநிற் றீர் பெற்றம் உகந்தே றிடுதிர்''187

எனச் சிங்கத்தினை அடர்த்து அதன் தோலை போர்த்துக் கொண்டதைக் காட்டுவார்

186 —ஊ சரபபுராணம்—நரசிங்கவதைச் சருக்கம்—பாடல் எண்:62
187 சுந்தரர் தேவாரம், திருப்பரங்குன்றப்பதிகம், பாடல் எண் : 7

புரசைக் களிறீட் டுரி போர்த்த
  கோலப் பொலிவும் கனகவடிவும்
அரசச் சீய உரிகொண்ட
  உத்தரீயத் தனியழகும்
........................... " [188]

மதங்கொண்ட யானையைப் பற்றி அடக்கிக் கொன்று அதன் தோலைப் போர்வையாக போத்திக் கொண்ட அழகிய தோற்றப் பொலிவும்.

புகை நிறத்தை ஒத்த வடிவழகு கொண்டு சிங்கத்திற்கெல்லாம், தலைமை பூண்டாற்போல் தோன்றி இரணியனின் செருக்கடக்கி: தன் கூரிய நகங்களால் அவ்வசுரனது குடல் உருவிய நரசிம்மாகிய திருமாலை, சரபமூர்த்தியாக உருவெடுத்த அழித்து அச்சிங்கத்தின் தோலைப் போர்வையாக போர்த்திக் கொண்டு விளங்கும் சிறப்புப் பொருந்திய அழகுமிக்க திருவுருவம் என்பதால் சிவபெருமான் சரபமாகத் தோன்றி நரசிங்கத்தை அடர்த்தழித்த செய்தியைக் காணலாம். நரசிம்மத்தை, சிவபெருமான் சரபமூர்த்தியாக உருக் கொண்டு அழித்த செய்தியினை பின் வரும் வேத உபநிடதங்களாலும் அறியலாம்.

ருக்வேதம் :

"அஹம்ம்ருணஹரபாய ருஷிபத்தவே" [189]
என்றும்

தைத்ரீய உபநிடதம் :

"உறிம் ஷறாத்த மதுயந்தி தேவா :
  விஸ்வயே ஸாதம் வ்ருஷபம் மதீமாம்" [190] என்றும்

ஸ்ரீஸ்காந்தம் :

"ஹரிம்ஹரந்தம் ஸரபம் விஸ்யே ஸாத மீஸ்வரம்
  அநுயாந்தி ஸுராஸ் ஸர்வே நாமோ
  வாக்யைல்ஸ் ஸஹத்ருதம்"[191]
என்றும்

---

188. சிவநெறிச் செய்யுட்திரட்டு, (காஞ்சிபுராணம்) பாடல் எண் 613

189-192 சிவமஹாபுராணம், முதற்பாகம், நரசிங்க சரப அவதாரங்கள், பக் 256

காசி காண்டம் !

புராஹிரண்ய கசிபும் தைத்ய ராஜம் மஹாபலம்
ஹத் வாதந் ருதிராபாந பரமத்தம் யாசிதாஸ-ணா
ருத்ர; ஸரப ரூபேண நரஸிஹ மபீடயத்''[192]

இவ்வரலாற்றினை காஞ்சிப்புராணம் காட்டும் நரசிம்ம சம்ஹார-மூர்த்தியில் திருஉருவ வடிவழகினைக் காணலாம்.

''நன்னா லிரண்டு திருவடியும்
நளிநீள் வாலு முகமிரண்டுங்
கொன்னார் சிறகு உருத்திரமுங்
கொடும்பே ரார்ப்பு மெதிர் தோன்றிச்
செந்நீர் பருகிச் செருக்குநர
மடங்க லாலி செகுத்துரிகொண்
டொன்னார் குலங்கண் முழுதழிக்கும்
உடையான் சரபத் திருவுருவம்''[193]

எட்டுத் திருவடிகளும், மிக நீண்ட வாலும், முகங்கள் இரண்டும், பொருந்திய நீண்டகன்ற சிறகுகளும், உக்கிரமான மிகுந்த கோபமும் கொண்டு, உலக உயிர்கள் அஞ்சத்தக்க மிகுந்த பேரிரைச்சலுடன், நரசிம்மத்தின் முன்பாகத் தோன்றி அதன் செருக்கினை அடக்கியும், அதன் உதிரம்பருகி ஆவிநீங்குமாறு கொன்றழித்தார். தம்மை எதிர்ப்போரின் குலங்களை வேரோடு சாய்த்துஅழிக்கும் சரபமூர்த்தியின் திருவுருவம் என்பதாம்.

23. கங்காளர் (முதுகெலும்பணிந்த முன்னோன்)

இக்கங்காளமூர்த்தியின் திருவடிவை பக்தி இலக்கியங்கள் மிகுந்த வியப்போடு பேசிப்பரவும். இதனை அப்பர் பெருமான் தம் தேவாரத்தில்

''பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடி இறக்கும் இறந்தான் களேபரமுங்
கருங்கடன் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காள-ராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமோ''[194]

193— சிவநெறிச் செய்யுட்திரட்டு—பாடல் எண் : 629—பக் 122.
194 சிவநெறிச் செய்யுட்திரட்டு அப்பர் தேவாரம், பக்கம் 867

என்பதால், பிரளய காலத்தில் உலகங்கள் எல்லாம் ஒவ்வொன்றாய் அழிந்து முடிவதால், இறந்துபடும் உயிர்வர்க்கமும் சத்தியலோகத்தில் வாழும் பிரமனும், வைகுண்டத்தில் வாழும் திருமாலும் அழிந்துபட அவர்களது எலும்புக் கூடுகளை கங்காள மூர்த்தியான சிவபெருமான் தமது உடம்பில் மாலையாக அணிந்து இனிவரப் போகும் நிலையுணர்ந்து வீணை வாசிப்பராக காட்சி கொடுப்பார் ஊழி முதல்வராகிய இறைவன் என்பதை அழகுறக் காட்டுவதைக் காணலாம்.

இதனை மேலும்,

''கோணாரணன் அங்கந் தோள் மேற்கொண்டு
கொழுமலரான் றன்சிரத்தைக் கையிலேந்திக்
கானார் களிற்றுரிவைப் போர்வைமூடிக்
கங்காள வேடராய் எங்குஞ் செல்வீர்''[195]

நாரணனின் அங்கமாகிய எழும்பை தோளில் கொண்டும், பிரம்மனின் சிரத்தைக் கையிலேந்தியும், களிற்றினை அடர்த்து அதன் தோலை போத்துக் கொண்டவராகவும் விளங்குகின்ற கங்காளமூர்த்தியைக் காட்டுவார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் :

''ஏன்ற அந்தணன் தலையினை அறுத்து
நிறைக்க மாலுதி ரத்தினை ஏற்றுத்
தோன்று தோள் மிசைக் களேபரந்தன்னைச்
சுமந்த மாவிரதத்த கங்காளன்
சான்று காட்டுதற் கரியவன் எளியவன்
தன்னைத் தன்னி லாமனத்தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவ லந்தனில் வந்து கண்டேனே''[196]

என அந்தணனாகிய பிரமனது ஒரு தலையினை அறுத்தும், திருமாலின் உதிரத்தினைப் பருகியும் தனது தோளின்மேல் அவரது எலும்புக்கூட்டினைத் தாங்கியவன், கங்காள மூர்த்தியாகிய சிவபெருமான் என்பதைக் காட்டுவார்.

---

195 அப்பதேவாரம், திருவாவடுதுறைத் திருத்தாண்டகம், பாடல் எண் : 6

196. சுந்தரர் தேவாரம், திருவலிவலப்பதிகம், பாடல் எண் 10

மணிவாசகப் பெருமான்

> "நங்காய்இ தென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
> கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ
> கங்காளம் ஆமாகேள் காலந்த — ரத்திருவர்
> தங்காலம் செய்யத் தரித்தனன் காண் சாழலோ"[197]

இப்பாடலால். பிரம்ம, விஷ்ணுக்காளின் கல்பகாலம்முடிவுற்றமை- யால் அவர்களது நரம்போடு எலும்பும் அணிந்து விளங்கியும் எலும்புக்கூட்டினைத் தோள் மேல் தாங்கிக் கொண்டகங்களா மூர்த்தியைக் காண்பாயாக! என இறைவனது தோற்றத்தை காட்டுவார். 'காலாந்தரத்திருவர்' என்பதால்பிரம்ம, விஷ்ணுவைக் குறிப்பால் உணர்த்துவார்.

காஞ்சிபுராணம் :

> "எளியவரை வலியர் வாட்டின் வலியாரையிருநீர்வைப்பன்
> அளியறத் தெய்வம் வாட்டு மெனுமுறைக்கமைய வன்றே
> தெளியுமா வலியைச் செற்றோற் செருத்துரிக் கவயம்
> போர்த்த
> வளியுளர் கச்சிகாவல் வைரவர்க் கன்பு செய்வோம்"[198]

இப்பாடிலில் எளியவர்களை வலிமையுள்ளவர் துன்புறுத்து வதுபோல், வாமனர் அவதாரம் கொண்டு மூவடின மண்கேட்டு மாவலியை அதல பாதாளத்தில் அழுத்தி அழித்ததுபோல், வலியாராகிய வாமனனின் செருக்கடக்கிச் சென்று அவரது முது கெலும்பை தன்தோள் மேல் சுமந்தவராகிய வைரவப் பெரு- மானைப் போற்றித்துதி செய்வோம் என்பதாம். இங்கு கங்காள மூர்த்தியின் செயலே, வைரவப் பெருமாள் மேல் ஏற்றிக் கூறப்பட்டதாகும். இறைவனது இவ்விருதோற்ற நிலைகளும் (கங்காளர் — வைரவர்) ஆணவம் அழித்து ஆட்கொண்ட நிலைகளை விளக்குவனவாக அமைந்துள்ளதை அறியலாம். இனி காஞ்சிப்புராணம் காட்டும் கங்காளமூர்த்தியைக்காண்போம்.

திருமாலின் பத்து அவதாரங்களில் வாமன அவதாரம் ஒன்று. அசுரகுலச் சக்கரவர்த்தியாக விளங்கி அகில உலகங் களையும் வலிமையால் கோலோச்சி வள்ளண்மையுடையவனாகி

---

197. திருவாசகம், திருச்சாழல், பாடல் எண் : 11
198. சிவநெறிச் செய்யுட்திரட்டு ,, ,, 74 பக் — 16

விளங்கிய மாவலிச்சக்கரவர்த்தியிடம் குறுகிய வடிவம் கொண்ட அந்தணனாகச் சென்று மூன்றடி மண்யாசிக்க, மாவலியும் அவ்வாறேதாரை வார்த்தளித்தான் வாமனனாகி திருமால் தனது ஒரு திருவடியால் கீழ் உலகங்களையும், மற்றொரு திருவடியால் விண்ணுலகத்தையும் அளந்து மூன்றடிமண்ணுக்கு இடம் எங்கே? என்று கேட்க, மாவலி தன்னையேதர, அவனை தம் திருவடி-யால் பாதாளத்தில் அழுத்தினான் என வரலாறு காட்டுகிறது. இதனை

"குறளாயணைந்து மூவடிமண்
 கொண்டு நெடுகி மூவுலகுந்
திறலா னைந்து மாவலியைச்
 சிறையிற் படுத்து வியந்தானை
யிறவே சவட்டி வெள்ளிநெலும்பை
 யெழிற் கங் காளப் படையென்ன
அறவோர் வழுத்தக் கைக் கொண்ட
 அங்கணாளன் திருவுருவம்"[199] எனக்

காஞ்சிப் புராணம் காட்டும்.

திருமால் குறளனாய் குறுகிய அந்தணவடிவங் கொண்டு, மாவலிச் சக்கரவர்த்தியிடம் சென்று மூன்றடிமண் தானமாக யாசிக்க, அதனைப் பெற நெடியோனாகப் பேருருக்காட்டி தனது வெற்றிமிக்க வலிமையால் மூவுலகங்களையும் (விண்ணுலகம், மண்ணுலகம், பாதாளலோகம்)தன் திருவடியால் கெடவதைத்துக் கொன்று அவனது முதுகெலும்பை கங்காளமூர்த்தி தனது கங்காளப்படையாக கையில் கொண்டு அறநெறிமிக்க சான்றோர் வாழ்த்த வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவுருவம் என்பதாம்.

இவ்வாறு முதுகெலும்பணிந்த முன்னோன் திருவுருவத்தை காஞ்சிப்புராணம் அழகுறக் காட்டுகிறது

24. காலபைரவர் (படைப்போன் சிரங்கொள் பைரவர்)

பிரம்மனுக்கு ஆதியில் ஐந்து முகங்கள் இருந்தன என்றும், தனக்குப் போலவே சிவபெருமானுக்கும் ஐந்து முகங்கள் உண்டு (ஆறாவது முகமான அதோமுகம் மறைவானதாகும்.)

199. சிவநெறிச் செய்யுட்திரட்டு பாடல் எண் 630 -பக் 122

அவரைப்போலவே நானும் முத்தொழில் செய்யவல்லவன் என்று தனக்குள் செருக்குற்ற பிரம்மதேவனின் செருக்கினை அடக்க எண்ணிய பெருமான் தனது அம்சமாக ஒரு புதல்வனைத் தம் புருவநடுவினின்று தோற்றுவித்த பிரம்மதேவனின் ஒரு தலையினைக் கிள்ளி எடுத்தார் என்றும். அதன்பின் பிரம்மனுக்கு நான்கு முகங்கள் அமைந்தது என்றும் இதனால் பிரமன் நான்முகன் என வழங்கப்பட்டான் என்றும் பின்னர் தனது தவறை உணர்ந்து சிவபெருமானை வழிபட்டு மீண்டும் தனது படைப்புத் தொழிலை மேற்கொள்ள இறைவன் அருள்புரிந்தான் என்பது பண்டைய புராண வரலாறாகும்.

இதனை பக்தி இலக்கியங்கள் போற்றுவதைக் காணலாம்.

கந்தபுராணம் ;

''பரமனை மதித்திடாப் பங்க யாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்''

என்பதால், தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரம்மனின் ஒருதலையைக் கிள்ளிய வரலாற்றைக் காட்டும்.

திருநாவுக்கரசு சுவாமிகள்

''விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடுதமருகங்கை
தரித்தோர் கோல காலபயிரவனாகி வேழம்
உரித்துமை அஞ்சக் கண்டு ஒண்திருமணிவாய் வள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனிரே''

கோரைப் பற்களும், ஒளிவிடுகின்ற சூழமும் ஏந்தி, வெடியொளி போல் ஒலிக்கும் உடுக்கையேந்தி, காலபயிரவனாகி வேழம் உரித்துப் போர்த்தக் கண்ட உமையம்மை அஞ்சி நடுங்குற்றதைக் கண்டு தனது மணிபோன்ற அழகிய திருவாயால் பெருமான் சிரித்தருள் செய்கின்ற திறத்தைப் பாடுவார்.

200. சிவநெறிச் செய்யுட்டிரட்டு, பக்கம் 16 - பாடல் எண் 73

திருவானைக்கா புராணம்

''உலக மளித்தல் சுதந்திரமன்
றுவணா முயர்த் தோற் கெனவன்சே
றிலகு முருவம் பொடித்தவன் பா
லெழுந்து படைப்புஞ் சுதந்திரமன்
றலர்மெல் லணையாற் கெனவவனை
யரங்கத் திசையா முகனாக்கிப்
பலரும் வெருவப் பொழி நெய்த்தோர்ப்
பயிக்கும் புகுந்தோன் பதம்பணிவாம்''[202]

காலபயிரவர், ஒருசிரம் கிள்ளியெடுத்து நான்முகனாக்கியதை எடுத்துக்காட்டுவார்.

காசி ரகசியம்

,'தளம்பொலி மலரோ னாதி வானவர் தாழ்ந்து போற்ற
உளம்பொலி காசிமேவும் உயிர்கள் செய் பாவமெல்லாம்
களம்பொலி யாது தண்டங்க கண்டற வொழித்து முத்தி
வளம்பொலி வைகை செய் காலபைரவற் கன்பு
செய்வோம்''[203]

என்பதால் காசி மாநகரில் இறக்கும் உயிர்களுக்கு முத்தி கிடைக்க வகை செய்பவர் காலபைரவர் என்பதை இப்பாடல் காட்டுவதைக்காணலாம்.

மணிவாசகப் பெருமான் :

''அயன்தலை கொண்டுசென் டாடல்பாடி
அருக்கன் எயிறு பறித்தல் பாடிக்
கயதீதனைக் கொன்றுரி போர்த்தல் பாடிக்
காலனைக் காலால் உதைத்தல் பாடிக்[204]

---

201. அப்பர் தேவாரம், திருச்சேறைப்பதிகம், பாடல் எண் : 6
202. சிவநெறிச் செய்யுட்திரட்டு (திருவானைக் காபுராணம்) பக்கம் : 16 — பாடல்
203, ,, (சாசிரகசியம்) பக்கம் 17-பாடல் எண் 176
204. திருவாசகம், திருப்பொற்சுண்ணம். பாடல் 18

இங்கு பிரமனது ஒருதலை கிள்ளியும், சூரியனின் பல்லினை உதிர்த்தும், கயந்தனாகிய யானைமுக அசுரனைக் கொன்று அதன் தோலைப் போர்வையாகப் போர்த்தியும் காலனை காலார் உதைத்தும் மார்க்கண்டேயரைக் காத்து அருள் செய்தது மாகிய திறத்தை பரவிப் பாடுகிறார்.

பிரம்மனது ஒரு தலையை காலபைரவமூர்த்தி தனது கூரிய நீண்ட நகத்தால் கிள்ளி எடுத்ததை மணிவாசகப் பெருமான்

''நல்லமலரின்மேல் நான்முக னார் தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரால் அரிந்ததென் றுந்தீபற''[205]

சுந்தரமூர்த்தி சுவாமிகள் :

''ஆர்த்தவர் ஆடர வம்மரை மேற்புலி ஈர்உரிவை
போர்த்தவர் ஆனையின் தோலுடல் வெம்புலால் கையகலப்
பார்த்த ரின்னுயிர் பார்ப்படைத்தான் சிரபஞ்சில்ஒன்றைச்
சேர்த்தவ ருக்குறை யும்மிட மிந்திருநின்றியூரே''[206]

என்பதால், புலித்தோலுடுத்தலும், ஆனையின் தோலுடுத்தலும் பிரம்மனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளி தம்முடன், சேர்த்தவர் என நின்றியூர் பெருமானைப் புரவுகின்றார்,

''அருமலரோன் சிரம் ஒன்றறுத்தீர் செறுத்
திரழற் சூலத்தில் அந்தகனை''[207]

தாமரை மலரில் வாழும் பிரம்டனின் ஒரு தலை கிள்ளி எடுத்தீர் திருசூலத்தால் அந்தகாசுரனை அழித்தீர் என்பார்.

''வேழம்உரிப்பர், மழுவாளர்
வேள்வி அழிப்பர், சிரமறுப்பர்
ஆழிஅளிப்பர், அரிதனக்கன்(று)
ஆனஞ் சுகப்பர் ...........''[208]

---

205. திருவாசகம், திருவுந்தியார், பாடல் 18
206. சுந்தரர் தேவாரம், திருநின்றியூர் திருப்பதிகம். பாடல் எண்6
207. ,, திருஅரிசிற்கநரப்புத்தூர், பாடல் எண் : 2
208. ,, திருக்கடவூர் மயானம், பாடல் எண் : 9

யானையின் தோலை உரித்துப் போர்வையாக அணிவார் மழுவெனும் ஆயுதப்படை ஏந்தியவர். தக்கனது யாகத்தை அழிப்பவர், அயனது சிரம் அறுப்பவர், திருமாலுக்கு சக்கரப்படை வழங்கியவர் என இறைவனது வீரச் செயலைவிளைப்படுத்துவர்.

> ''கருநீல மணிமிடற்றான்
> பொன்படி செஞ்சடையான்
> பிரமன்சிரம் பீடழித்தான்

எனநீலகண்டத்தையுடையவர், உமையம்மையை இடபாகம் ஏற்ற செங்கடையுடையவர். பிரமன் செருக்கழித்து சிரம் கொய்தவர், பெருமான் எனப்படுவர்.

சேரமான் பெருமாள் நாயனார் :

> ''பரமனை யேபலி தேர்ந்துநஞ் சுண்டது பண்மலர்சேர்
> பிரமனை யேசிரங் கொண்டுங் கொடுப்பது பேருளாம்''
> 209-அ

இங்கு பரமனை என்பது பிறர்மனைகள் (வீடுகள்)தோறும் சென்று பிச்சை ஏற்றுக்கொண்டும், தேவர்களைக் காக்கும் பொருட்டு ஆலகால நஞ்சினை உண்டருளியது.

நான்முகனின் ஒரு சிரத்தை பைரவமூர்த்தியைக் கொண்டு கிள்ளியெடுத்ததுமாகிய செயல்களெல்லாம் பிறர்க்கு பேரருளை நல்கவே என்பதாம்.

நக்கீர தேவநாயனார்:

> ''உலகம் மூன்றும் ஒருங்குடன் படைத்த
> மலரோன் தன்னை வான்சிரம் அரிந்தும்''209-ஆ
> மூன்று உலகங்களையும் முறையே படைத்த
> தாமரை மலரில் வாழும் பிரமனின் ஒருதலையைக்
> கிள்ளி எடுத்த பெருமான் என்பார்.

---

209. ,, திருநன்னிலத்துப் பெருகோயில் பாடல் எண் 6

209. அ1 பதினொராந் திருமுறை- பொன்வண்ணத் திருவந்தாதி -பாடல் எண் : 4

209-ஆ ,, கோப்பபிரசாதம் - பாடல் பதி 4-5.

நக்கர தேவநாயனர் :

''வானவர்கள் தாங்கூடி மந்திரித்த மந்திரத்தை
மேனவில் ஓடி விதிர் விதிர்த்துத் - தானவருக்
கொட்டிக் குறளை உரைந்த அயன் சிரத்தை
வெட்டிச்சிரித்த விறல் போற்றி''209-இ

கறுத்தாய் கடல் நஞ் சமுதுண்டு கண்டம்
கடுகப் பிரமன் தலையைந் திலும்ஒன்
றறுத்தாய் கடலங்க கரைமேல் மாகோதை
அணியார் பொழில் அஞ்சைக் களத்தப்பனே''210

என அஞ்சைக் களத்தப்பன், பிரமனது ஐந்து தலைகளில் ஒன்றை அறுத்தைக் கூறுவார்.

பட்டினத்தடிகள் :

''அயன் சிரம் ஒருநாள் அரிந்தனை என்றும்
வியந்தவாள் அரக்கனை மிதித்தனை என்றும்
தக்கன் வேள்வி தகர்த்தனை என்றும்
உக்கிரப்புலியுரி உடுத்தனை என்றும்
ஏனமும் அன்னமும் எட்டா திளைப்ப''211

பிரமனது தலையினை ஒருநாள் கிள்ளி எடுத்தீர், கைலாய மலையை தன் வலிமையால் பெயர்க்க நினைத்த அரக்கனாகிய இராவணனின் செருக்கினை-தம் திருவடியால் மிதித்தருள்புரிந்தீர் தக்கனது வேள்வி-யதனை வீரபத்திரரைக் கொண்டு அழித்தீர். தாருகா-வனத்து முனிவர்கள் யாகத்தினின்றும் ஏவிய புலியினைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்தீர். பன்றிவடிவு கொண்ட திருமாலும், அன்னப்பறவையின் வடிவுகொண்ட பிரம-னும் காண இயலாதவாறு நின்று அருள்புரிந்தீர் என இறைவனது புகழ்பாடுவர் பட்டினத்தடிகள் 211

---

209-இ , போற்றித் திருக்கலிவெண்பா-பாடல்18 19

210. சுந்தரத் தேவாரம், திருஅஞ்சைக்களம், பாடல் எண்: 8

211. சிவநெறிச் செய்யுட்திரட்டு...திருவிடைமருதூர் மும்மணிக் கோவை.

இனி காலபைரவமூர்த்தியின் வடிவழகைக் காஞ்சிப்புராணம் காட்டும் வழிக்காண்போம்.

''பொலங் கொள் பங்கி முகரோமம்
பொலிய வுமையோ டம்புயம்போல்
அலர்ந்த விழிக ளிரண்டுமது
முகிழ்த்தா லனைய நுதல்விழியும்
இலங்க விரவி நடுவிளங்கி
விருவ ரிகல்போ தயன் சிரங்கொய்
தலங்கு முசிரான் மருங்கமர
அமர்ந்த பெருமான் திருவுருவம்[212]

பொன்போன்ற அழகுமிக்க ஆண்மயிர்வகை உரோமங்கள் முகத்தில் பொலிந்து விளங்கவும். உமையம்மை உடன் அமர்ந்-திருக்க,தாமரைமலர்போன்ற சிவந்துமலர்ந்த கண்கள் இரண்டும், தேன் நிறைந்து விளங்குகின்ற நெற்றிக்கண் நடுவாக நிறைந்து விளங்கவும், தம்மோடு மாறுபட்டு செருக்குற்ற பிரம்மனின் ஐந்து தலைகளில் ஒன்றினை தனது கூரிய நகங்களால் கொய்து அம்மை, அப்பருக்கு அருகில் அமர்ந்து விளங்கும் பைரவமூர்த்தி உடனாய சிவபெருமானது திருவுருவம் என்பதாம்.

25 பிச்சாடனர் (பலிக்கெழு கோலப் பரமன்)

தாருகாவனத்தில் வாழ்ந்து வந்த மகரிஷிகள். யாகமே எல்லா நலன்களையும் கொடுக்கவல்லது என்றும் யாகத்தைக் காட்டிலும் கடவுள் வேறு இல்லை என்றும் செருக்கடைந்தவர்களாக இருந்தனர். அவர்களது மனைவியரோ தங்களின் கற்பொழுக்கமே மிகச் சிறந்தது என அகந்தை கொண்டனர். சிவபெருமான் இவர்களது ஆணவமயக்கத்தை ஒழிக்கக் கருதியவராக திருமாலை அழகிய பூங்கொடி போன்ற பெண் உருவம் கொள்ளச் செய்தும், சிவபெருமான் அம்மங்கைக் கேற்ற அழகராய் கோடி சூரியப்பிர-காசமான திருமேனியோடு உடுக்கையேந்தி,இனிய பண்ணினைப் பாடி, திகம்பரராய் (நிர்வாணராய்) அம்மங்கையர்கள் மையல் கொள்ளுமாறு விடுதோறும் பிச்சை ஏற்கையில்,அம்மகளிர் அவரது அழகில் மயங்கி, தம் வளைகழலவும் ஆடைகள் நழுவவும் தம் நிலை இழந்து தடுமாறினர்.

---

212. சிவநெறிச் செய்யுட்திரட்டு, பாடல் எண் 631- பக் 123.

மோகினி வடிவமேற்ற திருமாலோ தவமே சிறந்தது என்றிருந்த முனிவர்களை, தனது கவர்ச்சிமிக்க நடையில் சிக்கவைத்து, தனது மலரடியில் விழ்ந்து மையல் கொள்ளச் செய்தார். சிவபெருமானின் செயலால் கோபமடைந்த முனிவர் கள் சபித்தார்கள். அச்சாபங்கள் எல்லாம்வல்ல சிவபெரு-மானை சென்றடையவில்லை.

பின்னர் சிவபெருமான் முனிவர்கள் முன்தோன்றி "நீங்கள் கடவுளே இல்லை என்பதால் நாம் உம்மைச் சோதனை செய்தோம்" என திருவாய்மலர்ந்து அவர்களுக்கு ஞான உப தேசம் செய்து அவர்களுக்கு சிவலிங்கம் ஒன்று தந்து பூசித்து வருமாறும், சொல்லி மறைந்தருளினார் என்பது சிவமகாபுராணம் காட்டும் பிச்சாடன மூர்த்தியின் வரலாறாகும்.

இறைவனது இத்திருக்கோலப் பொலிவினை பக்தி இலக்கியங்கள் பலபடப் பரவிப் பேசுகின்றன.

ஞானசம்பந்தப் பெருமான் இக்கோலப் பொலிவினை

"வெந்தழல் வடிவினர் பொடிப்பூசி
விரிதரு கோவண வுடை மேலோர்
பந்தஞ்செய் தரவசைத் தொலிபாடிப்
பலபல கடைதோறும் பலிதேர்வர்
சிந்தனை புகுந்தெனக் கருணல்கிச்
செஞ்சுடர் வண்ணர்தம் மடிபரவ
வந்தனை பல செய விவராணீர்
வாய் மூரடிகள் வருவாரே[213]

என்றுப்

அப்பர் தேவாரம்

"நக்கம் வந்து பலியிடென் றார்க்கிட்ட
மிக்க தையலை வெள்வளை கொள்வது
தொக்க நீர்வயல் தோணி புரவர்க்குத்
தக்கதன்று தமது பெருமைக்கோ"[214]

---

213. சிவநெறி செய்யுட்திரட்டு, திருக்கோயில் வழிபாட்டு முறை பாடல் எண் : 19

14. அப்பர் தேவாரம் திருத்தோணிபுரப்பதிகம், பாடல் எண் : 2

இறைவா உமது அழகிய திருக்கோலத்தைக் கண்டு வியப்புற்று மயங்கி உமது அருகில் வந்து பிச்சையிடும் ரிஷி பத்தினிகளின் வெண்மை நிறம் வாய்ந்த வளைகள் கழலுமாறு செய்து அழகிய பசுமைவாய்ந்த வயல்கள் சூழ்ந்த திருத்தோணி-புரத்தவராகிய உமது பெருமைக்கு இச்செயல் தகுதியுடையதா-யில்லை எனப்பாடுவார்.

> "னைத்தலை மான்மறி யேந்திய கையன் கனல்மழுவன்
> பொய்த்தலை யேந்திநன் பூதியணிந்து பலிதிரிவான்"[215]

தம் ஒரு கரத்தில் மானும், மற்றொரு கரத்தினில் ஒளி விடுகின்ற மழுவாயுதமும், திருநீற்றை உடலெங்கும் பூசியும், பிரம்ம கபாலம் ஏந்தி பிச்சை ஏற்று எங்கும் திரிபவர் என்பார்.

> 'பல்லார்ந்த வெண்டலை கையிலேந்திப் பகவேறி
> யூருரான் பலிகொள் வானே ..... ......"[216]

எனவும்

> "உக்கார் தலைபிடித் துண்பலிக் கூர்தொறும்
> புக்கார் புகலூர்ப்புரிசடை யாரே[217]

எனவும்

> "பக்கமே பாரிடங்கள் சூழப் படுதலையில்
> புகலூர்ப் பிச்சையேற்றுண்டு பொலிவுடைத்தாய்க்
> கொக்கிறகின் தூவல் கொடியெடுத்த கோவணத்தோடு
> அக்கணிந்த அம்மானை நான் கண்ட தாரூரே"[218]

பூதகணங்கள் தம்மைச் சூழ்ந்துவர பிரம்மகபாலத்தில் ஊர்தோறும் பிச்சை ஏற்றுண்டு அழகுமிக்க கொக்கின் இறகு போன்ற வெண்மைநிறம் கொண்ட கோவணத்தோடு எலும்பு மாலையணிந்த பெருமானாகிய இறைவனை நான் கண்டது ஆரூரே என்பர்.

---

215. அப்பர் தேவாரம், திருவேதிக் குடிப்பதிகம், பாடல் எண் 2
216 ,, திருவாவடுதுறை ,, 9
217. ,, திருப்புகலூர் ,, 4
218. ,, திருவாரூர் ,, 2

பிறங்கிய சீர்ப் பிரமன்தன் தலைகை யேந்திப்
பிச்சையேற்றுண்டு முன்று ..........
... ... ... ... ... ... ...''[219]

''மையினார் மலர்நெ டுங்கண் மங்கையோர் பங்கராகி
கையிலோர் கபாலம் ஏந்திக் கடைதொறும்
பலிகொள்வான்தாம்
எய்வதோர் ஏனம் ஒட்டி ஏகம்பம் மேவினாரைக்
கையினால் தொழவல் லார்க்கு கடுவினைகளைலாமே''[220]

மையிட்டு, மலர்சூடி, கயல்போன்ற நெடுங்கண் மங்கை-யாகிய உமையம்மையை தனது ஒரு பாகத்தில் ஏற்றவராகிய பெருமான், தம் கையில் வெள்ளி மண்டையோடாகிய பிரம கபாலம் ஏந்தி, வீடுகள் தோறும் சென்று பிச்சையேற்று உண்டு திரிபவர். அர்ச்சுனர்க்கு பாசுபதம் அருள வேண்டி பன்றி உருக் கொண்ட முகாசுரன் பின் வேட்டுவ வடிவந்தாங்கி சென்ற பெருமானை, கைகூப்பி தொழுவல்ல அடியார்க்கு, பழமையான கொடிய வினைகள் யாவும் இல்லாமல் அழிந்து ஒழியும் என்பார் அப்பரடிகள்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் ;

''காரு லாவிய நஞ்சை உண்டிருள்
கண்டர் வெண்டலை யோடுகொண்டு
ஊரெ லாந்திரிந் தென் செய்வீர் பலி
ஓரிடத்திலே கொள்ளும் நீர்
பாரெ லாம் பணிந் தும்மையே பர
விப்பணியும் பைஞ்ஞீ லியீர்
ஆரமாவது நாகமோ சொலும்
ஆரணிய விடங்கரே''[221]

பிரம்ம கபாலத்தில் பிச்சை யேற்றுத்திரியும் உம்மை உலகங்களெல்லாம் பணிந்து வழிபடும். நீர் மாலையாக அணிவது பாம்புகளோ! எனக்குச் சொல்லும் என வினாத்தொடுப்பார். மற்றும்

---

219. அப்பர் தேவாரம் திருவாரூர் ,, 6
,, திரு ஏகம்பம் ,, 5
221. சுந்தரர் தேவாரம், திருப்பஞ்ஞீலிப்பதிகம், பாடல் எண் : 1

"பூண்பதோர் இளஆமை பொருலிடை யொன்றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாரும் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்
விண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ
சொல்லீர்
காண்பினிய மணிமாடம் நிறைந்த நெடு வீதிக்
கடல் நாகைக் காரோணம் மேவியிருந்தீரே"[222]

இப்பாடலில், நீர் பலிக்குச் சென்று முனிமகளிர் கைவளை கழலு மாறு மையல் கொள்ளச் செய்தால், உமையம்மை பொறுப்பாளோ? சொல்வீர் என வஞ்சிப்புகழ்ச்சியாகக் கூறுவார் சுந்தரர்

ஊர் தொறும் வெண்டலை கொண்டுண்பலி இடுமென்று
வார்தரு மென் முலையாள் மங்கையொடும்முடனே"
.............................................[223]

ஊர்கள் தோறும், வெள்ளிய பிரமகபாலம் ஏந்தி பிச்சையிடுவீர், அழகிய மங்கையாகிய திருமாலோடும் சென்று யாசிப்பீர் என்பார்,

"பணங்கொள் அரவம் பற்றிப் பரமன்
கணங்கள் சூழக் கபாலம் ஏந்தி
வணங்கும் இடைமென் மடவார் இட்ட
உணங்கல் கவர்வான் ஒற்றியூரே"[224]

பூதகணங்கள் சூழ்ந்துவர பிரம்மகபாலம் ஏந்தி, முனிமகளிர் இடும் பிச்சை யேற்பவர் ஒற்றியூர் இறைவன் என்பார்.

"காதல் செய்து களித்துப் பிதற்றிக்
கடிமா மலரிட் டுனை ஏத்தி
ஆதல் செய்யும் அடியார் இருக்க
ஐயங் கொள்வ தழகிதே
ஓதக் கண்டேன் உன்னை மறவேன்
உமையாள் கணவா எனையாள்வாய்

222. ,, திருநாகைக்காரோணம். பாடல் எண் :3
223. சுந்தரர் தேவாரம், திருக்கூடலையாற்றூர், பாடல் எண் :3
224. ,, திருவொற்றியூர் பதிகம். பாடல்எண் :5

ஆதற் பழனக் கழனிக் கச்சூர்
குழக் கோயில் அம்மானே'' [225]

உம்மை ஏத்தி வழிபட
— அடியவர்களாகிய நாங்கள் இருக்கையில் நீர் பிச்சையேற்பது அழகிய செயலோ என வினாத் தொடுக்கின்றார். தம்பிரான் தோழர் சுந்தரர்.

மணிவாசகம் பெருமான் :

''அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையும் தேவனென்று நன்னுமது என்னேடீ
நம்பனையும் ஆமாகேள் நான் மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாவென் றேத்தின்காண் சாழலே'' [226]

பொன்னம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் புரிந்து, உணவு வேண்டும் போது பிச்சையேற்று உண்டு திரியும். நம் பெருமானாகிய இறைவனையும், கடவுளென்று நாம் நினைப்பது எவ்வாறு? நான்கு மறைகளும் அறியமுடியாத பெருமானை ஈசா என ஏத்திப் போற்றுவார்க்கு அருளுபவன் காண் என்பார்.

சேரமான் பெருமான் நாயினார் :

''கூத்துக் கொலாமிலர் ஆடித்திரிவது கோள்வலைகள்
பாத்துக் கொலாம்பலி தேர்வது [226 அ]

இறைவன், பிச்சாடன வடிவங் கொண்டு பன்னிசைத்து, கூத்தினை யியற்றியும் வளைந்த வளையல்கள் அணிந்த பெண்களின்(முனிமகளிர்)வீடு தோறும்சென்று பாத்து—சோறு) உணவு வேண்டி பிச்சை ஏற்கிறார் என்பார்.

கபிலதேவ நாயனார்:

கொண்ட பலிநுமக்கும் கொய்தார்க் குமரர்க்கும்
புண்டரிக மாதினுக்கும் போதுமோ — மண்டி

225. சுந்தரர் தேவாரம் திருக்கச்சூர் ஆலக்கோயில், பாடல் எண் : 9

2 6. திருவாசகம் திருச்சாழல், பாடல் எண் : 17

226—அ பதினொராந்திருமுறை—பொன்வண்ணத் திருவந்தாதி பாடல் எண் : 7

உயிரிழந்தார் சேர்புறங்காட் டோரிவாய் ஈர்ப்ப
மயிரிழந்த வெண்டலைவாய் வந்து[226]—ஆ

நரிகள் திரிகின்ற, பிணங்களை இடும் சுடுகாட்டில் கிடைத்த மயிர் நீங்கிய வெள்ளிய மண்டையோட்டில், பிச்சையேற்றுப் பெற்ற பொருள் உடைக்கும் கொய்த மலர்களைக் கொண்டு கட்டப் பெற்ற மாலையை அணிந்த குமரனாகிய முருகப்பெருமானுக்கும், பெருவயிறு படைத்த விநாயகப் பெருமானுக்கும் தாமரை மலரில் வாழும் இலக்குமிக்கும் போதுமோ?

கபில தேவநாயனார் :

''வெள்காதே உண்பலிக்கு வெண்டலை
கொண்டூர் திரிந்தால்
என்காரே வானவர்கள் எம்பெருமான் [227]—அ

இறைவா நீவிர் சிறிதும் நாணமடையாமல், வெண்டலை ஏந்தி ஊர்கள் தோறும் சென்று பிச்சையேற்று உண்பதைக் கண்டு வானவர்கள் எள்ளி நகையாடமாட்டார்களோ? என பிச்சை ஏற்கும் அவலத்தைக் காட்டுவார்.

பரணதேவநாயனார்

பேரரவம் பூண்டு பெருந்தலையில் உண்டுழலும்
பேரரவம் பூணும் பிரான் [227] — ஆ

ஐந்துதலை நாகம் அணிந்தும். செருக்குற்ற நான்முகனின் மண்டையோட்டில் பிச்சை ஏற்று உண்டு உழன்று, ஓங்காரப் பேசுரொலி எழுப்பும் பெருமான் என்பார்.

காரைக்காலம்மையார்

''ஓத நெடுங்கடல் எத்தனையும் உய்த்தட்ட
ஏதும் நிறைந்ததில்லை என்பராற் — பேதையர்கள்
எண்ணா திடும்பலியால் என்னோ நிறைந்தவா
கண்ணார் கபாலக் கலம்''[227] இ

227—ஆ பதினொராந்திருமுறை சிவபெருமான திருவிரட்டை மணிமாலை பாடல் எண் 1

227—அ ,, 31

2.7 ஆ காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி பாடல் எண் 74

"இங்கிருந்துசொல்லுவதென் எம்பெருமான் எண்ணாதே
எங்கும் பலிதிரியும் எத்திறமும் — பொங்கிரவில்
ஈமவனத் தாடுவதும் என்னுக்கென் ஆராய்வோம்
நாம் அவனைக் காணலுற்ற ஞான்று"[228]

நாம் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது, எங்கும் பிச்சையேற்பதும், நள்ளிரவில் சுடுகாட்டில் ஆடுவதும், நாம் அவனைக் காணும் போது ஆராய்ந்து அறிவோம் என்கிறார் அம்மையார். இனிக்காஞ்சிப் புராணம் காட்டும் பிச்சாடன முத்தியின் அழகிய திருக்கோலத்தைக் காண்போம்.

"அடியிற் றொடுத்த பாதுகையும்
அசைந்த நடையு மிசை மிடறும்
வடிவிற் சிறப்ப நடந்தருளி
முறைழ யேந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோள் முனிமகளிர்
சுரமங்கையரை மயல் பூட்டிப்
படியிட் டெழுதாப் பேரழகாற்
பலிதேர் பகவன் திருவுருவம்"[229]

என்பதால், தமது திருப்பாதங்களில் அழகுற தொடுத்தணிந்தாற்போல பாதுகையையும், சற்றே அசைந்த தளர்நடையும், அழகிய பண்ணினை இசையோடு பாடுகின்ற திருமிடறும், அமைந்து தமது வடிவழகால், தனக்கு ஈடு எவரும் இப்புவியில் இல்லை என்பதாக சிறப்புற நடந்தருள் செய்து, தம் அழகிய தோள்களிலும் கைவளை முதலிய அணிகலன்கள் அணிந்தும், மத்தினை யேந்தியவர்களாகவும், தம் இல்லிலிருந்தும் வெளிப்பட்ட தாருகா வனத்து முனிவர் மகளிர்கள் மற்றும் தேவலோக பல்வகை மங்கையர்களையும் இறைவன் தமது அழகில் மயங்கி மையலுறுமாறு செய்தருளி, இப்புவியில் எவரும் தம் அழகைச் சித்திரத்திலும் தீட்ட முடியாப் பேரழகுடையவராய் விளங்குகின்ற பிச்சாடன முத்தியின் திருவுருவம்,

எனச் சித்திரத்திலும் தீட்ட ஒண்ணாப் பெருமானின் திருக்கோலப் பொழிவை அழகுறக் காட்டுவார்.

---

228. காரைக்கால் அம்மையார், அற்புதத் திருவந்தாதி பாடல் எண் : 25

229. சிவநெறிச் செய்யுட்றிரட்டு — பாடல் எண் : 632-பக்-123

# பயன்பட்ட நூல்கள்

## தமிழ் நூல்கள்


1. இராமநாதபிள்ளை, ப. (தொ.ஆ) : 'சிவநெறி செய்யுட்திரட்டு, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை - 1969

2. இராமநாதன் அரு. (ப.ஆ) : சிவமஹாபுராணம் - முதல் பாகம் பிரேமா பிரசுரம். சென்னை - 1982.

3. இராமசாமிப்புலவர், சு. அ. (கு அ) : பதினோராந் திருமுறை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை - 1971.

4. இராமானுசாச்சாரி, ர. : சைவசித்தாந்தம் சின்னக்கடைத் தெரு, திருச்சி - 2 1963.

5. காந்திமதி நாதபிள்ளை, வி.வி. : சிவஞானபோதச்சொற்பொழிவுகள் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சென்னை . 1. 1945.

6. சுந்தரமூர்த்தி, கு. (ப.ஆ) : உண்மை விளக்கம் காசிமடம், திருப்பனந்தாள் 19-9

7. சுப்புரெட்டியார், ந : சைவ சமய விளக்கு பாரிநிலையம், 194, பிராட்வே, சென்னை - 1984

8. விநாயகமூர்த்தி, அ. (ப ஆ) ; சைவ இலக்கியக்கோவை பண்ணைப்பதிப்பகம், - 1978.

9. சொக்கலிங்கம். வீ. (ப.ஆ) : சரப புராணம், சரஸ்வதி மஹால் நூல் நிலையம். தஞ்சாவூர்-1972.

10. தமிழண்ணல் : புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு சோலை நூலகம், மதுரை - 1980.

11. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் : பன்னிரு திருமுறை பதிப்புநிதி வெளியீடு, ஸ்ரீகுமரகுருபரன் சங்கம் ஸ்ரீ வைகுண்டம், 1970.

12 சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் : திருப்பனந்தாள் காசிமடம் பன்னிரு திருமுறை பதிப்புநிதி வெளியீடு ஸ்ரீ வைகுண்டம் - 1978.

13. ஞானசம்பந்தர் தேவாரம் : ,, ,,

14. மாணிக்கவாசகர் : திருவாசகம், பன்னிருதிருமுறை பதிப்புநிதி வெளியீடு, ஸ்ரீ குமரகுருபரன் சங்கம், ஸ்ரீ வைகுண்டம் - 1975.

15. — : அகநானூறு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிமிடெட், சென்னை - 1981.

16. — : ஐங்குறுநூறு - நியூசெஞ்சுரிபுக் ஹவுஸ், பி.லிமிடெட், சென்னை - 1909.

17. — : புறநானூறு நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பி,லிமிடெட், சென்னை - 1981.

# ஆங்கில நூல்கள்


1. As in Kumar Chatterjee : The Cult of Skanda Karttikeya in Ancient India, Punthi Pustak, Calcutta, 1980.

2. Arunachalam, M. Festivals of Tamil Nadu, Gandhi Vidyalayam, Tiruchitrambalam, Thanjavur Dt, 1986.

3. Bhattachrya, Haridass The Cultural Heritage of India, Vol. IV., The Ramakrishna Mission, Institute of Culture, Calcutta, 1956.

4. Das, R.K. Temples of Tamilnadu, Bharatiya Vidya Bhavan, Bombay, 1964.

5. David Dean Shulman Tamil Temple Myths, Princeton, University Press, 1980.

6. Gopinatha Rao, T.A. Elements of Hindu Iconography Mothilal Banarsidass, Delhi-1985.

7. Jagadisa Ayyar, P.V. South Indian Shrines, Asian Educational Services, New Delhi; 198-.

8. — South Indian Festivities, A.E.S. New Delhi - 19.

9. Ramanujam, A K. Speaking of Siva Baltimore, Marryland. 1973.

10. Raman. K.V. Sri Varadaraja Swami Temple Kanchi, Abhinar Publications, New Delhi, 1957.

11. Sivaraman, K. Saivam its Philosophical perspectives Mothilal.

புலவர் திரு. அர. ஆத்திஅடியான் பழனிநகரைச் சார்ந்தவர். அருள்மிகு பழனியாண்டவர் கலை-பண்பாட்டுக் கல்லூரியில் உதவியாளராகப் பணியாற்றி வருகிறார். இவர் 1977ல் புலவர் பட்டமும், 1978ல் பி.லிட் பட்டமும், 1984 ல் எம்.ஏ.முதுகலைப் பட்டமும் பெற்றார். அருள்மிகு பழனியாண்டவர் கலை-பண்பாட்டுக் கல்லூரித் தமிழ்த்துறை உயர் ஆய்வு மையத்தில் 1989ஆம் கல்வியாண்டில் எம்ஃபில் தமிழ் பயின்று முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். இவரது எம்ஃபில் ஆய்வுத் தலைப்பு'' ''மதுரை சொக்கநாதர் தமிழ் விடுதூது'' - ஓர் ஆய்வு ஆகும். ''பண்டைத் தமிழ் இலக்கியத்தில் திருமால்'' எனும் தலைப்பில் இவரது மற்றொரு நூல் வெளிவரவிருக்கிறது.



தி முல்லை அச்சகம் ❖ வாடிப்பட்டி ❖ போன் 4281 & 4833